உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

"எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும் ஆன்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.


தொகுதி—ங அ.] விக்கிரம ஹூ மாசி மீ [பகுதி—ச.

Vol. 38. February—March 1941. No. 4.


உள்ளுறை.




பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.

வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

1941.

rinted by Srimathu R. Shanmuga Rajeswara Naganatha Sethupathy Avl., and Published by Thiru. Narayana Iyengar at the Tamil Sangam Power Press, No. 54, Tamil Sangam Road, Madura.

# ஒரு வேண்டுகோள்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும் மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராசிரியர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும், பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவை சம்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும் மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

லக்ஷ்மீநாராயணையர்,
மானேஜர்.

---

## மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

| I. | சங்கப்பிரசுரம். | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி | 1 | 8 | 0 |
| 3. | *யாப்பணியிலக்கணங்கள் | | | |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் | 4 | 0 | 0 |
| 7. | *தோத்திரத்திரட்டு | | | |
| 8. | *தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | *ஷை இரண்டாம்பாகம் | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் | 5 | 0 | 0 |
| 9. | *அபிதானசிந்தாமணி | | | |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா | 0 | 6 | 0 |
| 14. | *தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி | | | |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை | 0 | 4 | 0 |
| 16. | ஸ்ரீகிருஷ்ணசரித்திரவிமர்சம் | 1 | 4 | 0 |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன | 0 | 1 | 0 |

உ
கடவுள் துணை.
# செந்தமிழ்.

தொகுதி-௩௮.] விக்கிரம ஸ்ரீ மாசி மீ [பகுதி-௪.
Vol. 38. February—March 1941. No. 4.

## கம்பராமாயணசாரம்

[ஸ்ரீ. ராவ்ஸாஹிப் வெ. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள், G.B.V.C.]

௧௮0-ஆம் பக்கத் தொடர்ச்சி.

### மருத்துமலைப்படலம்

[ அநுமான், சஞ்சீவிபருவதத்தைக் கொண்டுவந்து, பிரமாத்திரத்தினல் இறந்துகிடந்த இலக்குமணுதியரைப் பிழைப்பித்ததைக் கூறுவது.

#### விபீடணன் போர்க்களத்தைப் பார்த்தல்

இராமன் விரும்பியபடி உணவுகளைக் கொணரச்சென்றிருந்த விபீடணன், தான் கொண்டுவந்த உணவுகளைப் படைவீட்டில் வைத்துவிட்டுப் போர்க்களத்துக்குவந்தான். வந்தவன், அந்தப் படுகளத்திற் பட்டுக்கிடந்தவர்களைப் பார்த்துத் திடுக்கிட்டு, விடமுண்டவர்போலத் தியங்கி உணர்வுநீங்கினன். பின்பு, உணர்வு திரும்பப்பெற்றபோது, ஏங்கி வருந்திப் பெருமூச்சுவிட்டு, நாயும் பேயும் நரியும் தன்னைக் கண்டு விலகியோடச் சென்று, இராமலக்குமணர்களைக் கண்டான்.

#### உயிரோடுங்கிக்கிடக்கும் இராமலக்குமணரைக் கண்ட விபீடணன் தன்மை

விபீடணனுக்கும் இராமலக்குமணருக்கும் இடையே உள்ள அன்பை என்னென்பது! உடலும் உயிரும் உண்டானபின்பே அன்பு உண்டாமாதலால், அவை, முற்பட்டனவென்றாலும், அவை,

அது உண்டாவதற்கிடமாய், அவைகளையுடையவன் அதனை டிருத்தற்காகவேயுள்ளன. அவை, அதற்குக் காலத்தால் முந்தின வேயன்றிப் பயனாற் பிந்தினவேயாம். 'அன்பின் தன்மையை அறிதல் அருமையினும் அருமையானது. அத்தன்மையை அறிந்தவர் பரம்பொருளையே அறிந்தவராவர்'*

## இராமன் இறக்கவில்லையேன்று விபீடணன் அறிதல்

இராமலக்குமணர்நிலையைக் கண்டதனால் போய்விடுவதாக இருந்த விபீடணனது உயிர், அவர்களுக்கு அழிவில்லையென்பதை அவன் நினைந்ததனால், போகாது தங்குவதாயிற்று. துன்பமிகுதியால் தற்காலநிலைமையை முதலில் ஆராயாதிருந்தவன், துன்பம் சிறிதுகுறைவானபோது, ஆராய்வானாகி, இராமனுடலில் வடுவில்லாமையைநோக்கி, நடுக்கம் நீங்கினான். இலக்குமணனுக்கும் வானரருக்கும் உயிரொடுங்கியகாரணம் பிரமாத்திரமென்றும் அதனை எய்தவன் இந்திரசித்தே என்றும் தம்பிநிலைகண்டு சகிக்கமாட்டாமல் இராமன் மூர்ச்சித்திருக்கிறானென்றும் அறிந்து, நிகழ்ந்துள்ள விபத்தை நீக்குதற் கேற்ற உபாயம் யாதென ஆலோசித்தான்.

இராமன் இறந்திலனென்றாலும் உயிரொடுங்கியிருக்கும் இலக்குமணன் உண்மையாக இறந்துவிட்டால் அதன்பின் உயிர் துறவாதிரானென்றும், அப்படியானால் வஞ்சகவாழ்க்கையரான அரக்கரன்றோ வென்றாராவரென்றும் எண்ணிக் கண்ணீர்வடித்தான். பின்பு தேறி, நாகபாசம் பயனற்றுப்போனதுபோலப் பிரமாத்திரமும் அவமாயொழியுமென்றும் இலக்குமணன் இறவானென்றும் உயிரொடுங்கிக்கிடக்கும் வானரரும் மீண்டிடுவாரென்றும் இராவணன் நிலையானவெற்றியை அடையானென்றும் எண்ணி, நெஞ்சம் (தடுமாற்றம்நீங்கி) நிலைநிற்கப்பெற்றான்.

## விபீடணன் அனுமானைக் கண்டு மூர்ச்சை தெளிவித்தல்

பின்பு, அவன் இந்த ஆபத்துக்காலத்தில் உதவத்தக்கவர் யாரேனும் உயிரோடிருக்கின்றார்களோவென்று தேடிக் காண்பேனென்று ஒரு கொள்ளிக்கட்டையைக் கையிற்கொண்டு திரிந்த

---

* 'அன்பென்ப தொன்றின் தன்மை யமரரும் அறிந்த தன்றால்'
(இப்படலம் நான்காம்செய்யுளின் இறுதி அடி.)

'அன்பேசிவம்' (திருமூலர் திருமந்திரம்)

போது, (தன்வலியை அடக்கிய பிரமாத்திரத்தின்மீது கொண்ட கோபத்தினுல்) தீப்பொறிசிதறும் செங்கண்ணும் மடித்த வாயும் முறுக்கிய கையுமாக, ஆனைப் பிண அமளி*மீதே மேருப்பெருமலை போலக் கிடந்த காய்சினத்து அனும னென்னும் கடல்கடந்தானைக் கண்டான்.† கண்டு, கண்ணீர்சொரிந்துகொண்டு, 'உயிர் உண்டு' என்று எண்ணி, உடலிற் புதைந்திருந்த அம்புகளை ஒவ்வொன்ருக மெல்லென நோவாமல் வாங்கிக் குளிர்நீர்கொண்டுவந்து முகத்திலே தெளித்துத் தெளிவுபிறக்கச்செய்தான். ]

146 உயிர்ப்புமுன் னுதித்த பின்னர் உரோமங்கள் சிலிர்ப்ப வூடு[1]
வியர்ப்புள தாகக் கண்கள் விழித்தன[2] மேனி மெல்லப்[3]
பெயர்த்துவாய் புனல்வந் தூற விக்கலும் பிறந்த தாக
அயர்த்தில னிராம னுமம்[4] வாழ்த்தினன் அமர ரார்த்தார்.

கொண்டுகூட்டு: முன் உயிர்ப்பு உதித்த(தாக,) பின்பு உரோமங்கள் சிலிர்ப்பன(வாக, இரண்டுக்கும்) இடையே வியர்ப்பு உளதாக, (மூன்ருவ தாகக்) கண்கள் விழித்தன (ஆயின); வாய் புனல்வந்து ஊற, விக்கல்பிறந்த தாக, மேனி(யை) மெல்லப் பெயர்த்து இராமன் நாமம் அயர்த்திலன், வாழ்த்தினுன். அதுகண்டு அமரர் ஆர்த்தார்.

பொருள்: (மூர்ச்சைதெளிந்த அனுமான்,) முதலில் மூச்சு உண்டானதாக, பின்பு மயிர்சிலிர்ப்பனவாக, (இரண்டுக்கும்) இடையே வேர்வை அரும்புவதாக, (மூன்ருவதாகக்) கண்கள் விழிப்பை அடைந்தன. (மூர்ச்சையில் வறண்டிருந்த) வாயில் நீர் ஊற, விக்கல் உண்டாக, உடம்பை மெல்ல (அசைத்து)ப் பெயர்த்துக்கொண்டு இராமனையும் அவன் பெயரையும் மறவாதவனுய் 'ராம ராம' என்று தோத்திரம்செய்தான். அதுகண்ட தேவர்கள் ஆரவாரித்தார்கள்.

உயிர்த்தல் - சுவாசித்தல். உரோமம் சிலிர்த்தல் - மயிர்க்கூச்செறிதல். ஊடு - (சுவாசித்தல் மயிர்சிலிர்த்தல் இரண்டுக்கும்) மத்தியில். புனல் - நீர். அயர்த்தல் - மறத்தல். வாழ்த்தல் - தோத்திரஞ்செய்தல் - துதித்தல். 'வாழ்த்தினன்' என்பதற்கு 'இராமன் வாழ்க' என்று கூறினனென்றும் பொருள்கொள்ளலாம்.

மூர்ச்சையுற்ருர் தெளிவுறும்போது அவரிடத்துக் காணப் படும் மெய்ப்பாடுகள், இப்பாட்டில், கூறப்பட்டிருப்பது கவனிக்கத் தக்கது.

* அமளி - படுக்கை. † இப்படலம் 80-ஆம் பாட்டின் கடைசி அடி.

அனுமான், சதா இராமனைத் தியானித்துக்கொண்டிருப்பவன்; பிரமாத்திரத்தால் உணர்வுநீங்கும்போது இராமனையும் 'ராம' என்ற நாமமாகிய மந்திரத்தையும் நினைத்துக்கொண்டிருந்தான்; உணர்வு திரும்பவந்தபோது, அந்த நினைவும் திரும்பிவந்ததேயன்றிப் புதிதாக நினைந்தானல்லனென்பார், இராமன் நாமம் நினைந்தானென்னாது, இராமன் நாமம் அயர்த்திலன் என்றார்.

பாடபேதம்: [1] சிலிர்க்க வூறி, சிலிர்ப்ப வாறி. [2] விழித்தனன். [3] என்ன. [4] இராமநாமம்.

அனும விபீடணர் சாம்பவானைக் கண்டு பேசுதல்

[ அனுமான் மூர்ச்சைதெளிந்ததுகண்டு, விபீடணன், மகிழ்ச்சிகொண்டு, ஆநந்தக்கண்ணீர்சொரிந்து, அவனைப் பேரன்போடு தழுவினன். அனுமான், தன்னைத் தழுவினவனைத் தானும் எதிர் தழுவினன். பின்பு, 'இராமபிரானுக்குத் தீங்கில்லையே' என 'விபீடணன் சேமமாயிருக்கிறான்' என, இராமனிருந்த திக்கு நோக்கித் தெண்டனிட்டான். பின்பு சாம்புவான் எங்கிருக்கின்றான்? என்று வினவினன். விபீடணன், 'அவனை நான் எங்குங் கண்டதில்லை. உயிரோடிருக்கின்றானோ, இறந்தானோ என்பது தெரியவில்லை' என்று விடையளிக்க, அனுமான், 'அவனுக்குச் சாவில்லை. அவனைத் தேடிக் கண்டுபிடிப்போம். அவன், இறந்தாரெல்லாரையும் எழுப்பவல்லவன்' என்றான். விபீடணன் 'அப்படியானால், நாம் வாழ்ந்தோம். அவனைக் காண விரைந்துசெல்வோம்' என்றான். இருவரும் சாம்பவானைச் சிக்கிரமாகத் தேடிப்போய்ச்சேர்ந்தார்கள். முதிர்ந்த மூப்பினாலும் பிரமாத்திரம் தைத்த நோவினாலும் (அன்பர்களெல்லாம் அழிவுற்றார்களேயென்ற) துன்பத்தினாலும் வருந்தி, முச்சடங்கி, ஒன்றும் உணராது மயக்கங்கொண்ட மனத்தினனாய்க் கிடந்த சாம்பவான், அனும விபீடணர் வருவதை(க் கண்கள் மூடியிருந்ததனால் காணவில்லையாயினும்) அவர்கள் அடிச்சுவட்டொலியை (மூடாதிருந்த) காதினாற் கேட்டறிந்தான். அவன் 'போர்வென்று போன பகைவர் வரக் காரணமில்லை. வந்தவர் தன் மீது இரக்கங்கொண்டு வந்தவராயிருக்கவேண்டும்' என்றெண்ணித் துன்பம்நீங்கி, அருவிவழியும் மலைகள்போலக் கண்ணீர்சொரியும் இருவரையும் தேறுதல்வார்த்தைகூறித் தேற்றி, (அவர்கள் இன்னார் இன்னாரெனப் பகுத்தறிதற்குக் கண்பார்வை பற்றாததனால்) 'நீவிர்

யாவிர்' என வினவ, அம்முதியோன் ஆவியோடு அறிவும் நீங்கா திருக்கின்முன் என்றறிந்து, மகிழ்ந்து, 'பிழைத்தோம் பிழைத்தோம்' என்று விபீடணன் விளம்பக்கேட்டு, 'விபீடணரே, உம் பக்கத்தில் நிற்பவர் யார்?' என, 'நீர் நீடுவாழ்க. அடியேன் அனுமான் நிற்கின்றேன், தொழுகின்றேன்' என்று அனுமான் கூற, '(நீ ஒருவன் இருத்தலால்) எல்லோரும் (உயிர்பெற்று) எழுந்திட்டோம் எழுந்திட்டோம்' என்று கூறி, மகிழ்ச்சிமிகுதியினுல் ஊக்க முடையவனுனுன்.

பின்பு, சாம்பவான், 'திருமாலே இராமனுதலால், அவனைப் பிரமாத்திரம் யாதொரு தீங்கும் இழைக்காதென்பதை அறிவேன். அவன், அந்தப் பிரமாத்திரசம்பந்தமாக யாது செய்தான்?' என்று வினுவினுன். அனுமான், 'அவன், உயிரொடுங்கிய தம்பியைக் கண்ட துன்பமிகுதியினுல் தோன்றிய துயிலுக்குட்பட்டுள்ளான்' என்முன்.

சாம்பவான் அனுமானைச் சஞ்சீவிமருந்து கொண்டுவரும்படி கூறுதல்

சாம்பவான், 'இலக்குமணன் உயிரொடுங்கியிருக்கக்கண்டால், இராமன் தாங்கியிருக்கமாட்டுவானே! இருவருக்கும் உடல் இரண்டேயன்றி உயிரொன்றே. அவர்களுக்கு ஒருமூலம் திருமாலேயாதலால், உயிரும் ஒன்றேயாக உள்ளது. இதுநிற்க. இனி, இமைப்பளவும் தாமதியாமல், சஞ்சீவிமருந்தைக் கொணர்வாயாக. அதை நீ கொணர்ந்தால், எழுபதுவெள்ளம் வானரசைனிய முழுவதையும் இராமலக்குமணரிருவரையும் (இவர்கள் பிழைத்தாலன்றி இறந்துபடும்) மூன்றுலகத்தாரோடு தருமதேவதையையும் நான்குவேதங்களையும் சாவினின்று தப்பி வாழச்செய்தாயாவாய். அந்த மருந்தைக் கொணருதற்குச் சிறிதும் காலதாமதஞ்செய்யாமல் நான் சொல்லும்வழியே செல்லுவாயாக.

சாம்பவான் சஞ்சீவிமருந்து இருக்கும் இடமும் அதற்கு வழியும் தூரமும் தெரிவித்தல்

இந்தக் கடல்கடந்து ஒன்பதினுயிரம் யோசனை தூரம் சென்முல், இமயமலையைச்சேர்வாய்; அதனினின்று திரும்பவும் ஒன்பதினுயிரம்யோசனை சென்முல், ஏமகூடபருவதத்தை எய்துவாய். இந்த

மலைக்கு ஒன்பதினாயிரம்யோசனைக்கப்பாலுள்ளது நிடதமலை; நிடத மலைக்கும் மேருமலைக்குமிடையே உள்ள தூரமும் ஒன்பதினாயிரம் யோசனையே. மேருமலையின் அகலம் முப்பத்தீராயிரம்யோசனை. மேருவைக்கடந்து மீண்டும் ஒன்பதினாயிரம்யோசனைசென்றால், நீலகிரியை அடைவாய். நீலகிரியினின்று நாலாயிரம்யோசனை; தூரத்திலுள்ளது, மருத்துமலை. அந்தக் *'கார்வரையைக் காணுதி; மற்றது காண இத்துயர்க்குக் கரையும் காண்டி' என்றான்.

## மருந்துகளின் விவரணம்

பின்பு, அந்த மருந்துப்பூண்டுகளை விவரிப்பானாய், 'அந்த மலையிலுள்ள மருந்துமூலிகைகளுள் ஒன்று (சஞ்சீவகரணி) இறந்தவர்களைப் பிழைப்பிப்பது. மற்றொன்று (சந்தானகரணி) உடம்பு வெவ்வேறுகூறுகளாகப் பிரிக்கப்பட்டாலும் பொருந்தச்செய்வது. வேறொன்று (விசல்லியகரணி) உடம்புள்ளே புதைந்த படைக்கலங்களை வெளிப்படும்படிசெய்வது. பின்னுமொன்று (சாவருணியகரணி) அடையாளம் தெரியாதவண்ணம் உருவழிந்த உடம்பை அதன் இயற்கையுருவமடையசெய்வது' என்றுகூறி, அந்த மருந்துமூலிகைகளைக் தெரிந்துகொள்ளும்படி அவைகளின் விசேட அடையாளங்களை விளங்கச்சொன்னான் சாம்பவான். அவன், 'இந்த மருந்துகள், தேவாசுரர் திருப்பாற்கடலைக் கடைந்தகாலத்தில் தோன்றியவை. இவைகளைத் தேவர்கள் பத்திரமாக வைத்திருக்கின்றார்கள். வாமனனான திருமால் திரிவிக்கிரமனாய் மூவுலகை ஈரடியால் அளந்த வெற்றியை நான் பறையறைந்து பகிரங்கப்படுத்த உலகெங்கும் திரிந்தபோது, இந்த மருந்துமூலிகைகளைக் கண்டு, இவைகளின்குணங்களை முனிவர்கள் மொழியக் கேட்டுத் தெரியலானேன். இந்த மூலிகைகளை எண்ணிறந்த தெய்வங்கள் காத்துக்கொண்டிருக்கின்றன; அன்றிப் பெரிய சக்கராயுதமொன்று (சுற்றிச்சுழன்று) காத்துக்கொண்டிருக்கின்றது. பொய் இருக்குமிடத்துக்குப் பக்கத்திலேயும் நில்லாத (-சத்தியவிரதனான) நீ செய்யக் கருதியது சிரியகாரியமென்றுதெரிந்து, அந்தக் காவற்றெய்வங்களும் சக்கராயுதமும், (அந்த மருந்துகளைக்) கையகத்தனவாகக்

---

* இந்தப்படலம் உசு-ஆம் பாட்டின் கடைசி அடி. கார்வரை - கரிய மலை. காணுதி - காண்டி - காண்பாய். துயர்க்குக் கரையும் - (நம் நண்பர்களெல்லாரும் இறந்ததனால் உண்டாகிய) துன்பக்(கடலின்) கரையையும்.

கொண்ட உன்னைக் கோபியாதனவாய்த் தூரத்தேபோய் மறைந்து விடும்' என்றான்.*

### அனுமான் மருந்துகொணரப் பெருவடிவங்கொளல்

'யான் இதுசெய்வதே உன்னுடைய கட்டளையானால், (அந்தக் கட்டளையை எளிதாக நிறைவேற்றிவிடுவேன்). இறந்தாரெல்லாரும் திண்ணமாகப் பிழைத்தாராவார்கள். எம்பெருமானுக்கு யாதோரிடையூறும் தீங்கும் நேராமல் தெளிவுபிறக்கச்செய்யுங்கள்' என்றுகூறி, அனுமான் அவர்களைநீங்கித் தலையை வானம்தடுக்கத் தோள்கள் திசைகளைக் கடக்க ஆகாசத்தை(த் தன்னுள் அடங்க) விழுங்கினனென்னும்படி வளர்ந்தான் (ஆகித் தன் இயற்கைப் பேருருவங்கொண்டான்). அவனுக்குக் கிரகவரிசைகளும் நட்சத்திரவரிசைகளும் இரத்தினமாலைகளாயின. தோளுக்கும் தோளுக்கும் தூரம் ஆயிரம்யோசனையினும் அதிகமாயிருந்தது. பாதம் பெயர்க்க, இலங்கை இடம்போதாதாயிற்று. கைகளை வீசுதற்கு, திசைகள் காணாதனவாயிருந்தன. (மருந்துகொணர) விரைந்தெழுவானுடைய வடிவநிலை இப்படிப்பட்டதாயிருந்தது.

### அனுமான் வேகமாகக் கிளம்பும் விவரணம்

அனுமான், வாலை வளைத்து, வாயை மடித்துக் கையை நிமிர்த்துக் காலைப் பதித்து, மார்பை விரித்துக் கழுத்தைச் சுருக்கி, மெய் மயிர் சிலிர்ப்ப, விரைவுகொண்டு, இலங்கை கருங்கடலுள் ஆழ்ந்து மரக்கலம்போல நடுக்கமுறக் கிளம்பினான்.

### அவன்செல்லும் வேகத்தினால் விளைந்த நிகழ்ச்சிகள்

(வடக்குநோக்கிச்செல்லும்) அவன் வேகத்தினால், மேகங்கள் பிளந்தன; கடல்கள் கிழிந்தன; விண்மீன்கள் விழுந்தன; மலைகளும் மரங்களும் அழிந்தன. அவன் உடலிற் பிறந்த சண்டமாருதத்தால், வடக்கேயிருந்த மலைகள் சரிந்தன. கடல் பின்னேசெல்லக்

---

* 'பொய்ம்மருங்கில் நில்லாதாய் புரிகின்ற
காரியத்தின் பொருளை நோக்கிக்
கைம்மருங்குண் டாம்நின்னைக் காயாவாம்
அப்புறம்போய்க் காக்கும் என்றான்'

கைம்மருங்குண்டாம் என்ற அடி, திருநெல்வேலிக்கவிராயரவர்கள் வீட்டு ஏட்டுப்பிரதியிற் கண்டது.

காற்று முன்னேசெல்ல, உள்ளம் பின்னேசெல்லும்படியாக உடல் முன்னேசெல்ல (மனவேகத்தினும் மிகுந்த) வேகத்தோடு செல்வானை விண்ணவர்கள் கண்டு 'இராக்கதரைத் துன்பக்கடலுள் ஆழ்த்தி, எங்களை இன்பக்கரையிலேற்றினான்' என்றார்கள். மேகலோகம், சந்திரலோகம், சூரியலோகம், நட்சத்திரலோகம், சுவர்க்கலோகமென்ற போகலோகங்களெல்லாவற்றையும் கடந்து, பிரமலோகத்தைக் கிட்டியதென்னும்படியிருந்தது, அனுமானது உயரம்.

அவன் தேகத்தையும் வேகத்தையும் கண்டவர்கள் ஊகித்தல்

(உயர்ந்து அதிவேகமாகப்போகும் அனுமானைக் கண்ட) விண்ணுலகவாசிகளில் ஒருசிலர், 'கருடாழ்வான் வைகுந்தத்துக்கு விரைந்துசெல்கின்றா' னென்றார்கள்; வேறுசிலர், '(சத்தியலோகத்துள்ள) பிரமதேவன் வேறுலோகத்துக்குப்போகின்றா' னென்றார்கள். இன்னும் சிலர், 'ஈசனல்லாதார் யாரே, இவ்வளவு தூரத்துள்ளதென்று சொல்லமுடியாத மேலுலோகத்துக்குப் போகவல்லார்? இவன் அந்தத் திரிநேத்திரனான சிவனே'யென்றார். விண்ணுலகத்துக்கு மேல்மேலாகவுள்ள உலகங்களில் உள்ளவர்கள், 'வேதங்களுக்கெட்டாத திருமாலே தனக்கு இட்டமான இந்த உருவங்கொண்டு விளையாடுகின்றா'னென்றும், 'நன்றாகப் பார்ப்போம் என்று பார்ப்பவர் கண் இமைக்குமுன் கண்ணுக்கெட்டாததூரத்தே செல்கின்றா'னென்றும், 'தன்னை அடைந்தவர்கள் என்றும் நீங்காத சிறப்புடைய முத்தியுலகத்தை உற்றிடுவா'னென்றும் கூறினார்கள்.]

வேகமாகச்சேலலும் அனுமானுடலின் தோற்ற வருணனை

147 உருவென்றார் சிலர்சிலர்க[1] ளொளியென்றார்[2]
சிலர்சிலர்க ளொளிரு மேனி[3]
அருவென்றார் சிலர்சிலர்க[4] ளண்டத்துக்
கப்புறநின்[5] றுலக மாத்துங்[6]
கருவென்றார் சிலர்சிலர்கள் காற்றென்றார்
சிலர்சிலர்கள்[7] கடலைத் தாவிச்
செருவென்ற[8] னிலையொன்றுந்[9] தெரியகிலா[10]
நுலகனைத்துந் தெரியுஞ் செல்வர்.[11]

கொண்டுகூட்டு: உலகனைத்தும் தெரியும் செல்வர், கடலைத் தாவிச் செருவென்றான் நிலை ஒன்றும் தெரியகிலார், (அவர்களுள்ளே,) சிலர்சிலர்கள் 'உரு' என்றார்; சிலர்சிலர்கள் 'ஒளி' என்றார்; சிலர்சிலர்கள் 'காற்று' என்றார்; சிலர்சிலர்கள் 'அரு' என்றார்; சிலர்சிலர்கள் 'அண்டத்துக்கு அப்புறம்நின்று உலகம் ஆக்கும் கரு' என்றார்.

பொருள்: அனைத்துலகங்களையும் அறியும் (அறிவுச்) செல்வர்கள், கடலைத்தாண்டி (இலங்கையை அடைந்து அங்கே இராக்கதரோடுசெய்த) போர்களில் வெற்றிபெற்றவனான அனுமானுடைய (உடலின்) நிலைமையை அறியமாட்டாதார். (அவர்களுள்ளே) ஒருசிலர், (அதிவேகமாகச்செல்லும் அவனுடைய உடலைக் கண்ணுக்கும் மெய்க்கும் புலனாகும்) 'உருவப்பொரு'ளென்றார்கள்; வேறுசிலர், (மெய்க்குப்புலனாகாது, கண்ணுக்கு மட்டும் புலனாகும்) 'ஒளிப்பொரு'ளென்றார்கள்; மற்றும்சிலர், (கண்ணுக்குப் புலனாகாது, மெய்க்குப் புலனாகும் பரிசப்பொருள்களுள் ஒன்றான) 'காற்று' என்றார்கள்; பின்னுஞ் சிலர், (மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் ஐம்பொறிகளுள் ஒன்றுக்கும் புலனாகாது மனத்துக்குப் புலனாகும்) 'அருவப்பொரு'ளென்றார்கள்; இன்னும் சிலர், அண்டங்களுக்குப் புறம்பாயிருந்து உலகங்களை உண்டாக்குகின்ற (ஐம்பொறிகளால்மட்டுமன்றி மனத்தாலும் அறியமுடியாத) மூலகாரணப்பொருளென்றார்கள்.

ஒளிரும் - பிரகாசிக்கும். அரு - உருவமில்லாதது. மேனி - உடல். ஆக்கும் - உண்டாக்கும் - படைக்கும். கரு - காரணப்பொருள். செரு - போர். தெரியகிலார் - தெரியமாட்டாதார்.

பாடபேதம்: [1] சிலர் சிலவர். [2] ஒளியென்ன. [3] ஒளிருமேனும். [4] சிலர்கள்சிலர், சிலர் சிலவர். [5] அண்டத்துக் கப்பானின்று, அண்டத்தும் புறத்தும் நின்று. [6] காக்கும். [7] மற்றென்றார், அன்றாயிற். [8] வென்றார். [9] ஒருவர். [10] தெரிக்கிலார், தெரிகிலர்கள். [11] தெரியுந் தேவர், சொல்வார் தேவர்.

வேகமாகச்செல்லும் அனுமானுடலிற் பிறந்த ஓசைவருணனை

[ பிரமலோகம்வரையும் நிமிர்ந்து ஆகாயமுழுவதையும் (வியாபித்து - இடமாகக்கொண்டு) மறைத்த, (வேகமாகச்செல்லுகின்ற) அனுமானுடைய பேருடலினின்றுபிறந்த உக்கிர ஓசையினால் திக்குப்பாலகர்கள் சிரம்நடுங்கினார்கள். அண்டகோளங்கள் அதிர்ச்சியுற்றன.

### அனுமான் இமயத்தையும் கயிலையையும் எய்துதல்

மிகக்குறிய வாமனன் மிக நெடிய திரிவிக்கிரமனாக, அவன் சிற்றடி இவன் பேரடியானவைகளால் உலகம் அளக்கப்பட்ட காலத்திற்போலச் சாதாரண வடிவமுடையவனாகவிருந்த அனுமான் அசாதாரண அபார ஆகிருதியுடையவனாக வளர்ந்து, சஞ்சீவி மருந்துகொணரச்சென்றகாலத்தில் உலகோரெல்லாரும் உவகையுற்றனர். அவன், தேவர்கள் முனிவர்கள் சித்தர்கள் அவர்கள் தேவிமார்களெல்லாரும் மகிழ்ந்து தன்மேலே சொரிந்த மலர்கள் பொதிந்துவிளங்க, நிறையப்பூத்த கற்பகதருப் பறந்தாற்போலச் சென்றான். அவன் இமயமலையை அடைந்தபோது, அங்குள்ள தேவரும் முனிவரும் மற்றும் அறவழியொழுகும் அனைவரும் 'நீ எடுத்தகாரியம் இனிது முடிக' என்று வாழ்த்தினர். அப்பால் அவன் கயிலைமலையைக் கண்டு கைகூப்பினான். கயிலாசகிரிவாசனான சிவபிரான், அவனைப் பார்வதிதேவிக்குச் சுட்டிக்காட்டி, 'அவன் வாயுகுமாரன்; இராமதூதன்' என, 'அவன் செல்லும் காரியம் யா' தென அவள் வினவ, 'சஞ்சீவிமருந்து கொணரச் செல்லுகின்றான். இராமன் பகைவரான இராக்கதர் அழிவது திண்ணம். (தேவர் முதலியோருடன்) நாமும் நாளைத்தினம் இராமராவணயுத்தத்தைக் காண்போம்' என்றான்.

### அனுமான் ஏமகூடத்தையும் நிடதத்தையும் தாண்டி மேருமீது செல்லுதல்

அனுமான் கயிலைமலையினின்று ஒன்பதினாயிரம் யோசனை சென்று ஏமகூடமலையின் உச்சியை அடைந்தபோது, முடிவில்லாத காமஇன்பத்தை அனுபவிக்கிற பாக்கியம் படைத்த தேவர்கூட்டத்தைக் கண்டு, அந்த மலையினின்று ஒன்பதினாயிரம்யோசனைசென்று நிடதமலையை அடைந்தான். அந்தமலையினின்று மீண்டும் ஒன்பதினாயிரம்யோசனை கடந்து மேருமலையை அடைந்தான்.

[தொடரும்.]

---

ஸ்ரீ:

தா(யா)ராநகரவேந்தன் போஜதேவன் இயற்றிய

# ஸரஸ்வதீகண்டாபரணம்

## (கலைமகள்கழுத்தணி)



37-ஆம் தொகுதியின் ௫௩அ-ஆம் பக்கத் தொடர்ச்சி.

[ஸ்ரீ. V. S. ராமஸ்வாமிசாஸ்திரியாரவர்கள், B.A., B.L.]

### 12. அதிகோபமை.

க்ரமேணாநேந க்ருதிபிரேஷ்டவ்யாதிகோபமா ।
விஶேஷஸ்த்வவயோர்யேந மநாகநாஸ்ய ப்ரதீயதே ॥ ௧௨௨ ॥

முன் நியூநோபமைக்குக் கூறியமுறைப்படியே அதிகோபமையும் குணமாகக்கொண்டு வழங்கப்படும். [குற்றமற்ற அதிகோபமையாவது:] கூறுதுவிடுத்த உவமேயவியல்பு ஆண்டு அநுமானவாயிலாக விளங்கித்தோன்ற நிற்பதாம். [அவ்வாறு விளங்கித் தோன்றுதெனில், ஆண்டு அதிகோபமை குற்றமெனப்படும்.]

உதாரணம்:—

ஸவித்யுத்வாஸா: ப்ரக்ருஹீதஶார்ங்க:
மநோஜ்ஞபீமம் வபுராப க்ருஷ்ண: ।
ஶதஹ்ரதேந்த்ராயுதவாந்நிஶாயாம்
ஸம்ஸ்ருஜ்யமாந: ஶஶிநேவ மேக: ॥

இரவில் மின்னலையும் வானவில்லையும் உடையதாய்த் திங்களுடன் சேர்ந்துவிளங்கும் மேகத்தைப்போலப் பீதாம்பரத்தையுடுத்தவரும் சார்ங்கமென்னும் வில்லையுடையவருமான கண்ணன், அழகியதும் அச்சம்விளைப்பதுமான வடிவைக் கொண்டார்.

இங்கே, உவமானத்திற் கூறப்பட்ட அடை மூன்று; அவற்றுள் மின்னலுடைமை வானவில்லுடைமை என்னும் இரண்டற்கும் நேராக உவமேயத்தும் பீதாம்பரமுடைமை சார்ங்கவில்லுடைமை என்னும் இரண்டியல்பு கிளக்கப்பட்டுள்ளன. மூன்ருவது உவமானதருமம் திங்களுடன் சேர்ந்திருத்தல். அதற்குநேராக உவமேயத்திற் சங்குடைமை கூறப்படவில்லை. ஆதலால் உவமேய தருமத்தினும் உவமானதருமம் மிக்கு அதிகோபமை என்னும் குற்றமாவான்செல்லுமெனினும், கூறப்படாத உவமேயதருமம் எளிதில் ஊகித்தறியத்தக்கதாயிருத்தலால் இது அக்குற்றமாகாது குணமாகவே கொள்ளப்படும்.

## 13. பங்கச்சந்தம்.

𑌯𑌦𑌾 𑌤𑍀𑌵𑍍𑌰𑌪𑍍𑌰𑌯𑌤𑍍𑌨𑍇𑌨 𑌸𑌂𑌯𑍋𑌗𑌾𑌦𑍇𑌰𑌗𑍌𑌰𑌵𑌮𑍍 ।
𑌨 𑌛𑌨𑍍𑌦𑍋𑌭𑌙𑍍𑌗 𑌇𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌸𑍍𑌤𑌦𑌾 𑌦𑍋𑌷𑌾𑌯 𑌸𑍂𑌰𑌯𑌃 ॥ ௧௩ ॥

எவ்விடங்களில் ஸம்யோக (-மெய்க்கூட்டம்) எழுத்துக்களை விரைவில் உச்சரிப்பதால் அதற்கு முன்புள்ள எழுத்துக்கள் குருவென்று கொள்ளப்படாது இலகுவெழுத்தென்றே கொள்ள இடமுளதோ, அவ்விடங்களில் சந்தோபங்கம் என்னும் குற்றம் இன்று.

உதாரணம்:—

ஜஹ ண்ஹாஉம் ஓஇண்ணஏ
ப்3ஹுஸோஹ்ணாவி ஸுஸம்ஸா ஸுஜஹ்ழ ।
த்ஹ ஸுண்ஹா ஸூவிதாஸாம்
ஸவ்ஹ ஹோஸாண ஸாம் தஹிஹே ॥

[யயா ஸ்நாதுமவதீர்ணே ஶுத்4ரே
ஹ்ருத ஸோஹ்ணாவித ஸம்ஶோகாய ஸாஹ்ழ ।
தயைவ ஸ்நாதா ஹவவிஷம்
ஸ்வஹ்ஹ ஹோதா நதீதீயே ॥]

கோதாவரியில் நீராடுதற்கு இறங்கியபோது உன் அரையிலுடுத்த ஆடை பாதியளவு நனைந்ததனாலேயே நீ அந்நதியில் நீராடியவளானாய்.

இங்கே, இரண்டாவதும் பதினோராவதும் இருபத்துமூன்றுவதுமான எழுத்துக்கள் (— ஹ, ஶ்ர, க்ஷ, என்பன) தம்மளவில் இலகுவெழுத்துக்களேயாயினும், அவற்றின்முன்வரும் எழுத்துக்கள் ஸம்யோக எழுத்துக்களாய் (-மெய்ம்மயக்கமாய்) இருத்தலால், அவை இலகுவெனப்படாது குருவாம். ஆயினும், மேல்வரும் ஸம்யோகவெழுத்துக்களை விரைவாக உச்சரிப்பின் கீழ்நின்றவை குருவெழுத்தாகவேண்டும் யாப்புறவின்றி இலகுவெழுத்தாகவும் பெறும். ஆதலால் அவை குருவெழுத்தாங்கால் நேரும் பங்ச்சந்தம் (சந்தோபங்கம்) என்னும் குற்றம் இன்றாயிற்று.

## 14. யதிபங்கம்.

வாக்யஸ்தா நவிரதி ப்ராப்தயதிஸம்ஜ்ஞயா ।
ஸம்ஶ்லிஷ்டம் யதயா நா மாணகம் தஸ்யகஷ்யதே ॥

உரிய இடங்களில் யதிவாராததும் அல்லாத இடங்களில் யதி வருவதுமாய செய்யுளடி யதிபங்கம் என்னும் குற்றமுள்ளது எனப்பட்டது. ஆயினும், அது சிலவிடங்களில் அமைவதுமாம் என்று கூறப்படுகிறது.

உதாரணம்:—

ஸோஹம் வாஷ்பத்யபஹி நவ: ஸாந்த்ரீணாம்ப்ரயோய:
கிம்விஹாவாயஸஹோஸாயெப்ரேக்ஷிதம் காதிநீநாம் ।
காய-ர்காய-ர்ணயஹிவிகலா ந்யாமஹெஹெநவ வஸ்யது
வஸ்யா ஶ்ரீவம் வஹதி நூவ ஊ த்யஹி வாயம் ப்ரயோம: ॥

இங்கே நான்காமெழுத்தில் யதிவரற்பாலதாக, அங்ஙனம் வாராது ஐந்தாம் எழுத்தில் வருவதாயிருந்தமையால் யதிவழு எனத்தகுமெனினும், இஃது ஸந்தியால் நேர்ந்ததாதலின் அங்ஙனம் வழுவெனப்படாது அமைவுடையதேயாம்.

பெரியோர் கூறுவர்:—

ஸாஸந்த்யக்யதெ ப்ராயொ யாதஹெஹெ தவிஷ்யதெ ।
நாஹெஹெவ ஶெஷெஷா நஷொஷ ஊதி ஸூரய: ॥

ஸந்தௌ பதாந்தே லோபஸ்ய பதத்வம் நிஶ்சிதம் யதா ।
ததா ஸந்திவிகாராணாம் பதத்வேபி வர்ண்யதே ॥

உயிரெழுத்துப்புணர்ச்சியால்வந்ததன்றிப் பெரும்பாலும் வினைச்சொல்லைப் பகுப்பதன்கண்ணும் பெயர்ச்சொல்லைப் பகுப்பதன்கண்ணுமே யதிவழு என்னும் குற்றமாம். மற்றையிடங்களில் (-உயிரெழுத்துச் சந்தியால்வரும் பகுப்புமுதலியனவற்றில்) அஃது குற்றமாகாது என்று அறிஞர் கூறுவர். பதத்தின் இறுதி கெட்டவிடத்து எஞ்சியபகுதி எவ்வாறு பதமென்றே வழங்கப்பெறுமோ, அவ்வாறே சந்திவிகாரத்தோடுகூடியதும் பதமெனவே கொள்ளப் படும்.

## 15. அசரீரம்.

அஶரீரம் க்ரியாஹீநம் க்ரியாபேக்ஷா ந யத்ர தத் ।
யத்ராஸ்யாதோபேக்ஷா வா ந தோஷஸ்தத்ர தத்த்வதா ॥ ௧௫ ॥

வினைமுற்றுச்சொல் இல்லாத வாக்கியம் அசரீரமென்னும் குற்றமுள்ளதென முன்பு கூறப்பட்டது. ஆயினும், வினைமுற்றுச் சொல்லை அவாவாது பொருள்முடியுமிடத்தும், உண்மைப் பொருள்தரும் வினைமுற்றுச்சொல்லைமட்டும் அவாவுமிடத்தும் அக்குற்றம் இன்ரும்.

உதாரணம்:—

கியந்மாத்ரம் ஜலம் விப்ர ஜாநுதக்நம் நராதிப ।
ததாபீயம் அவஸ்தா தே நஹி ஸர்வே பவாத்ருஶா: ॥

1. அந்தணரே! தண்ணீர் எவ்வளவு ஆழம்?
2. அரசே! முழங்காலளவுமட்டும்.
3. அப்படியிருந்துமா உமக்கு இவ்வளவு கஷ்டம்?
4. அரசே! எல்லோரும் உம்மைப்போன்றவராக உள்ளவரல்லரே.

இங்கே முதல் மூன்றுவாக்கியங்களும் வினைமுற்றுச்சொல்லை அவாவாது முடிவெய்திநின்றன. நான்காவது வாக்கியத்தில் 'உள்ளவர்' என்னும் சொல்மட்டும் எச்சமாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டது. அங்ஙனம் சேர்த்துக்கொள்ளப்பட்ட அச்சொல் உண்மைப் பொருளடியாகவந்த வினைச்சொல்லாதலால், அது கூறுவிடினும் தானே வந்தியைவதாதலால் அதுவும் குற்றமன்று.

## 16. சிதிலம்.

ஶ்லிஷ்டமஸ்ப்ருஷ்டஶைதில்யம் ஶிதிலம் தத்விபர்யய: ।
கௌடைர்விஶிஷ்யதே தத்ர பந்தநுப்ராஸகௌரவாத் ॥

நெகிழிசையின்றி வரத்தொடுப்பது சிலிஷ்டம் என்றும், நெகிழிசைவரத்தொடுப்பது சிதிலம் என்னும் குற்றமாம் என்றும் கூறப்பட்டன. ஆயினும், கௌடகவிஞர் அவ்வாறு நெகிழத்தொடுத்தலையும் சிறந்ததெனவேகொண்டு குணமென்பர்.

உதாரணம்:—

லீலாவிலோலலலனாலலிதாலகலாலஸா: ।
விலஸத்மாலதீமாலாஜலகாலாநிலா வவு: ॥

விளையாட்டில் ஈடுபட்ட மடந்தையர்களின் அழகுபொருந்திய கூந்தல்களை அசைத்துக்கொண்டும், மாலதிப் பூமாலைகளைச் சிதறச் செய்துகொண்டும் கார்காலத்துக்காற்று வீசியது.

இங்ஙனம் ஓரெழுத்தே வரத்தொடுத்தலால் நெகிழிசைவாய்ந்திருப்பினும், கௌடர் இந்நடை அழகுவாய்ந்ததெனக் கொள்வர். எனவே அவ்வொருசாரார் கொள்கையின்படி இது குணமேயாம்.

## 17. வைஷம்யம்.

ந தோஷ: க்வாபி வைஷம்யே வ்யக்தாலங்காரகாரணாத் ।
கௌடைர்த்ருஷ்ட்யா ராஜ்யதஸ்வாச்ச ஶப்தாடம்பரதோஷிணா ॥

சொற்றொடர்கள் ஒரு நெறியினவன்றி மாறுபட்டுவருமாயின் அது வைஷம்யம் என்னும் குற்றமாமென்று முன் கூறப்பட்டது. எனினும், அது, பொருளணி சொல்லணி நிமித்தமாக வரினும், கௌடகவிஞர் ஆதரித்தவையாயிருப்பினும் குற்றமாகாது குணமாம்.

உதாரணம்:—

𑌚𑌨𑍍𑌦𑌨𑌪𑍍𑌰𑌣𑌯𑍋𑌦𑍍𑌗𑌨𑍍𑌧𑌿𑌰𑍍𑌮𑌨𑍍𑌦𑍋 𑌮𑌲𑌯𑌮𑌾𑌰𑍁𑌤𑌃 ।
𑌸𑍍𑌪𑌰𑍍𑌧𑌤𑍇 𑌰𑍁𑌦𑍍𑌧𑌮𑌦𑍍𑌧𑍈𑌰𑍍𑌯𑍋 𑌵𑌰𑌰𑌾𑌮𑌾𑌮𑍁𑌖𑌾𑌨𑌿𑌲𑍈𑌃 ॥

சந்தனமரங்களின்சேர்க்கையால் நறுமணம்பொருந்தியதும் மென்மையாயதுமான தென்றல் என் ஊக்கத்தை அழித்துச் சிறந்த பெண்களின் மூச்சுக்காற்றுடன் போட்டியிடுகின்றது.

இங்கே, சொற்றொடர்கள் ஒருநெறிப்பாடின்றி, மென்னடை தழுவியவும், வன்னடை தழுவியவும், இடைப்பட்டனவுமாய் மாறுபட்டுளவாயினும், அணிகுறித்துவருதலானும் கௌடகவிஞரால் கொள்ளப்பட்டுவந்தமையானும் குணமாயின.

[தொடரும்]

---

௨

# மலையும் கடலும்

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமிவிபுலாநந்தரவர்கள்.]

'நடுக்கின்றி நிலியரோ வத்தை யடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி யந்தணர் அருங்கட னிறுக்கும்
முத்தீ விளக்கிற் றுஞ்சும்
பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே'

(புறநானூறு—௨.)

'இமயமலையும் பொதியின்மலையும் போன்று ஒழியாது நெடுங் காலம் விளங்கித் தளக்கமின்றிநிற்பாயாக' என முரஞ்சியூர் முடி நாகராயர் சேரமான் பெருஞ்சோற்றுதியன் சேரலாதனை வாழ்த்தினார். மலைக்கும் அரசற்கும் பொதுத்தன்மை அசைவின்றி நீடு வாழ்தல்.

'பொதியி லாயினு மிமய மாயினும்
பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினும்
நடுக்கின்றி நிலைஇய வென்பத தல்லதை
யொடுக்கங் கூறார் உயர்ந்தோ ருண்மையின்
முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே'

(சிலப்பதிகாரம்—௧.)

என இளங்கோவடிகள் பொதியில், இமயம், புகார் என்ற மூன்றினையும் ஒருவாற்றான் ஒப்புரைத்தார். ஆதியில் தோன்றுதலும் சலிப் பின்றி நிலைபெறுதலும் பொதுத்தன்மைகள்.

'அன்றியிரு பூதலமு மிருதட் டாக
அகத்தியன்வாழ் குன்றினையும் அணிமுக் கோணக்
குன்றினையும் சீர்தூக்கி நிறுப்ப தாகக்
கோகனத னமைத்ததுலைக் கோலும் போலும்'

(வில்லிபாரதம்-அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்.)

என வில்லிபுத்தூராழ்வார் கூறுதலின், தமிழ்முனிவன்குன்றும், ஈழநாட்டுத் திரிகோணக்குன்றும் ஒப்புநோக்குதற்குரியவாயின.

கோணமலை தேவாரம்பெற்ற தலமாதலின், 'திரு' என்னும் அடையடுத்துத் திருக்கோணமலை என வழங்கவும் பெறும். அலைகடல் நடுவண் நிலைபெறநிற்றல் திருக்கோணமலைக்குச் சிறப்பியல்பு.

'கரைகெழு சந்துங் காரகிற் பிளவும் அளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகடல் ஓதம் நித்திலங் கொழிக்குங் கோணமாமலை'

'கொடிதெனக் கதறும் குரைகடல் சூழ்ந்து
கொள்ளமுன் நித்திலஞ் சுமந்து
குடிதனை நெருக்கிப் பெருக்கமாய்த் தோன்றுங்
கோணமாமலை'

'தெழித்துமுன் அரற்றுஞ் செழுங்கடல் தரளம்
செம்பொனும் இப்பியுஞ் சுமந்து
கொழித்துவன் திரைகள் கரையிடைச் சேர்க்குங்
கோணமாமலை'

'கோயிலுஞ் சுனையுங் கடலுடன் சூழ்ந்த கோணமாமலை'

'விரிந்துயர் மௌவல் மாதவி புன்னை
வேங்கைவண் செருந்திசண் பகத்தின்
குருந்தொடு முல்லை கொடிவிடும் பொழில்சூழ்
கோணமாமலை'

'குன்றுமொண் கானல் வாசம்வந் துலவுங் கோணமாமலை'

என்றெல்லாம் திருஞானசம்பந்தசுவாமிகள் அகத்தியன்வாழ்குன்றினுக்கு ஒப்பான அணிமுக்கோணக்குன்றினைச் சீர்பெறவுரைக்கின்றார்.

'மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்'

என வகுத்த நானிலத்தினும் இரண்டு ஒருங்கியைந்துநிற்றலின், இரண்டினுக்குமுரிய அழகினையும் தாங்கி 'ஒண்கானல் வாசம்வந் துலவும்' மலையாயிற்றுத் திருக்கோணமாமலை.

மலைவருணனை கூறுமிடத்துச் சம்பந்தசுவாமிகளது தேவாரத் திற்கு ஒரு தனிச்சிறப்புண்டு. முதுகுன்றம், செங்குன்றம், முழு நீலக்குன்றம் (இந்திரநீலப்பருப்பதம்), முருகனுறை பரங்குன்றம், கொடுங்குன்றம், குறும்பலா, காளத்தி, கேதாரம், கைலை, கோ கரணம், குற்றாலம், இடைச்சுரம், கற்குடி, ஈங்கோய்மலை, திருப் பருப்பதம் எனும் மலைகள் தமக்குரிய இயற்கை வனப்போடு தேவாரச்செழும்பாடலளிக்கும் தெய்வவனப்பும் பொருந்தியன.

'நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாடு' (சிலப். எ.)

என்றமையின் மலையும் கடலும் தமிழ்நாட்டிற்கு வரம்பாயின.

'நீலத் திரைக்கட லோரத்தி லேநின்று
நித்தந் தவஞ்செய் குமரி யெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடை யேபுகழ்
மண்டிக் கிடக்குந் தமிழ்நாடு'

எனச் சுப்பிரமணியபாரதியார் இவ்வுண்மையினை அழகுறக் கூறுகின் றார்.

'வெள்ளிப் பனிமலையின் மீதுலவுவோம்—அடி
மேலைக் கடல்முழுதுங் கப்பல்விடுவோம்'

என அக்கவிஞர் நம் நாடு வருங்காலத்தில் அடையப்போகின்ற உயர் நிலையை யெடுத்துகூறுமிடத்துப் பனிமலையையும் அலைகடலையும் குறிப்பிடுகின்றார்.

வேள்பாரி ஆண்ட பறம்புமலையும், குமணவள்ளலுக்குரிய முதிரமலையும், வல்விலோரியினது கொல்லிமலையும், எழினி அதிய மான் ஆண்ட குதிரைமலையும், கண்டீரக்கோப்பெருநற்கிள்ளியி னது தோட்டிமலையும், மலையமான் திருமுடிக்காரிக்குரிய முள்ளூர் மலையும், நாஞ்சில்வள்ளுவனாண்ட நாஞ்சில்மலையும், நன்னனது நவிர மலையும் தம்மையுடையோரது கொடைவென்றியினாலே புலவர் பாடும் புகழுடையவாயின.

'புலவரை யறியாப் புகழொடு பொலிந்து
நிலவரைத் தாங்கிய நிலைமையிற் பெயராத்
தொலையா நேமிமுதல் தொல்லிசை யமையும்
புலவராய் புரைத்த புனைநெடுங் குன்றம்
பலவெனின் ஆங்கவை பலவே பலவினும்
நிலவரை ஆற்றி நிறைபயன் ஒருங்குடன்
நின்றுபெற நிகழுங் குன்றவை சிலவே
சிலவினுஞ் சிறந்தன தெய்வம் பெட்புறு
மலரகன் மார்பின் மைபடி குடுமிய
குலவரை சிலவே குலவரை சிலவினும்
சிறந்தது,
கல்லறை கடலும் கானலும் போலவும்
புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
எல்லாம்,
வேறுவேறு உருவின் ஒருதொழி லிருவர்த்
தாங்கு நீணிலை ஓங்கிருங் குன்றம்' (பரிபாடல்–15.)

என இளம்பெருவழுதியாராலே திருமாலிருஞ்சோலைமலையினதுசிறப்புக் கூறப்பட்டது.

பயன்தருதலும் தெய்வத்திற்கு இருப்பிடமாதலும் மலைக்குரிய சிறப்பாகக் கூறப்பட்டன. உழவருழாத பயனுடைமை, வறப்பினும் வளந்தரும் வண்மை, பகைவரால் தாக்குதற்கரிய காவலுடைமை என நின்ற இயல்புகளைநோக்கி மன்னர் மலையினை இருக்கையாக்கினரென்னலாம். அளத்தற்கருமை, அசைவின்மை, மாவும் மானும் பூவும் புள்ளுமென் றின்னவற்றின் இயற்கைவனப்பு, அரிதுமுயன்றாரானன்றிப் பிறரால் அணுகுதற்கருமை, நீரருவியுடைமை என்னும் இவ்வியல்புகளினாலே மலைகள் தெய்வக்கோயில்களாகத் திகழ்ந்தன. மேலையவற்றோடு உழவருழாது விளையும் உணவுடைமையும்பற்றி முனிவர் மலைக்குகைகளை இருப்பிடமாக்கினர்.

மலையை வருணித்துக்கூறும் அழகிய செய்யுட்கள் தமிழ்மொழியில் நிரம்பவுள்ளன. ஆன்றோர் வகுத்த பத்துப்பாட்டிலே திருமுருகாற்றுப்படையும், குறிஞ்சிப்பாட்டும், மலைபடுகடாமும்,

தொகைநூல்களிலே குறிஞ்சித்திணைப்பாலவாய பன்னூறுசெய்யுட்களும் சீவகசிந்தாமணியிலே பதுமையாரிலம்பகம், விமலையாரிலம்பகம், மண்மகளிலம்பகம், என்றின்னவும், சிலப்பதிகாரத்திலே குன்றக் குரவை, காட்சிக்காதை என்றின்னவும், பெருங்கதையிலே உஞ்சைக் காண்டத்துக் குறிஞ்சிநிலங்கடந்தது என்னும் பகுதியும், திருத் தொண்டர்புராணத்துத் திருமலைச்சிறப்பு, கண்ணப்பநாயனார்புராணம் என்றின்னவும், நாலாயிரதிவ்யப்பிரபந்தத்துள் திருவேங்கடம், சிங்க வேள்குன்றம், வதரியாச்சிரமம், திருப்பிருதி என்றித்தொடக்கத்த தலங்களைக்கூறும் பாடல்களும், சூளாமணி, கம்பராமாயணம், வில்லி பாரதம், கந்தபுராணம் எனநின்ற காப்பியங்களிற் சிலபகுதிகளும், திருக்கைலாயஞானவுலா பொன்வண்ணத்தந்தாதி, கயிலைபாதி காளத்தி பாதியந்தாதி, திருவீங்கோய்மலையெழுபது, திருக்கண்ணப்பதேவர்திரு மறம் என்றின்னவும் பிறவும் மலைவருணனை தந்துநின்றனவென்றால், மலைக்கும் தமிழுக்குமுள்ள தொடர்பினை விரித்துக்கூறவும் வேண்டுமா? யாம் அறிந்த பிறமொழிகளிலே மலைவருணனைகூறுஞ் செய்யுட்கள் இவ்வளவு அதிகமில்லை.

ஆங்கிலமொழியிலே கடலைவருணித்துக்கூறுஞ் செய்யுட்கள் அதிகமாக உள்ளன. நமதுமொழியிலுள்ள நெய்தற்றிணைச்செய்யுட்கள் கடல்மீதுசெல்லாது கடலையடுத்த நிலத்தின்மீதுசெல்வன. நெய்தற்கருப்பொருளாகிய இரங்கலினைக் குறித்தனவாதலின், இச் செய்யுட்கள் அவலச்சுவை பயப்பனவாய்க் கழிக்கானலிலுள்ள புள்ளினையும் பூவினையும் முன்னிலைப்படுத்தினவாய், எற்பாட்டு வருணனையோடு கூடிவருவன.

‘புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோற்
றுன்ப முழவாய் துயிலப் பெறுதியால்
இன்கள்வாய் நெய்தால்நீ பெய்துங் கனவினுள்
வன்கணார் கானல் வரக்கண் டறிதியோ’

(சிலப்பதிகாரம்—எ)

என்பது போல்வன.

தமிழ்நாட்டினர் கலத்திற்சென்று பிறநாடுகளைத் தம்வயப் படுத்தி வெற்றிக்கொடிநாட்டினரெனத் தேசசரித்திரம் கூறுகின் றது. தமிழ்வணிகர் பண்டமாற்றுநோக்கமாகக் கலமேறிப் பிறநாடு களுக்குச் சென்றதுண்டு. அங்ஙனமாயினும், அந்நிகழ்ச்சிகளைக் கூறுஞ்செய்யுட்கள் தமிழ்மொழியில் அதிகம் இல்லை. சீவகசிந்தா மணியிலும், மணிமேகலையிலும் காணப்படும் வரலாறுகள் வணிகர் கலத்திற்சென்ற நிகழ்ச்சிகளை ஓரளவாகக் கூறுகின்றன.

'திரைகட லோடியும் திரவியந்தேடு' என்றமையின், பொரு ளீட்டுதல் கருதிய ஸ்ரீதத்தன் என்னும் வணிகன், நன்னாளிலே வறியோர்க்கு வேண்டுவன நல்கிக் கோடும் பறையும் முழங்கக் கலத்திலேறுகின்றான். கொடியணிந்த கூம்பிலே கட்டிய மூன்று பாய்கள் காற்றினைமுகக்கக் கப்பல் நன்றாக ஓடி அழகியதீவொன் றினைச்சேருகிறது. அத்தீவில் இறங்கிய வணிகன் அரசனுக்கு முத் தாரங்கொடுத்து, அவனது தலையளியைப்பெற்று, மகளிரது ஆடல் பாடலினைக் கண்டும் கேட்டும் அகமகிழ்வுற்றுச் சின்னாள் தங்கிப், பண்டங்களை விற்று விலையாகப்பெற்ற நிதிக்குப்பையைக் கப்பலி லேற்றி, அரசனிடம் விடைபெற்று, இரேவதி வியாழவோரையி லே ஊர்க்குத் திரும்பப் புறப்படுகின்றான். பெருங்காற்று வீசுதலி னாலே கப்பல் கூம்பு ஒடிந்து நீரினுள் அமிழ்கின்றது. வணிகன் இற்ற கூம்பினது துண்டினைத் தழுவி, நடுயாமத்திலே, கடலலை யினை நீந்திக் கரைசேருகின்றான். தரன் என்பான் தோன்றி வணிகனைக் கலுழவேகனிடம் இட்டுச்செல்லுகிறான். இவ்வரலாற் றினைத் திருத்தக்கதேவர் சுவைநிறைந்த கவியாக அமைத்துத் தமிழர்க்கு நல்கினார்.

இக்காலத்திலே நிக்கபார் (Nicobar) என வழங்கும் நக்கவாரத் திலே கலங்கவிழ்ந்து கரைசேர்ந்த சாதுவன் என்னும் வணிகனது செய்தி மணிமேகலையினுட் கூறப்பட்டது.

தேவையர்கோனாகிய காங்கேயன் இயற்றிய கண்ணகியார் வழக்குரை என்னும் சிறுகாப்பியத்திலே கண்ணகியாரது காற் சிலம்புக்கு நாகமணி கொணரும்பொருட்டு மீகாமன் கப்பலேறிச்

சென்ற செய்தியும், வெடியரசனோடு கடற்போர்செய்த செய்தியும் கூறப்பட்டன.

எந்திரக்கப்பல்கள் எழுகடலையும் தாண்டி உலகினை வலம்வருத லும், ஒருநாட்டிலே விளையும்பொருள், பலகாவதங்களுக்கப்பா லுள்ள பலப்பலநாடுகளுக்குச் செல்வதற்குக் கடலே பாதையாக அமைந்திருத்தலும், நிலத்திலுள்ள வசதிகளிலும்பார்க்கப் பன் மடங்கு அதிகமான வசதிகளோடு கலத்திற் செல்லுதலும், பீரங்கி யேந்திய மிதக்குங்கோட்டைகளைப்போன்ற போர்க்கப்பல்கள் கடற் போர்புரிதலும் பிறவும் இக்காலத்து நிகழ்ச்சிகள்.

மேற்றிசைநாடுகளிலே, புதுமணத்த மென்மகளிரும் புருட ரும் வரைவுக்காலந்தையடுத்துவருவதாகிய இன்பநுகர்ச்சிக்குரிய தலைத்திங்களிலே கடற்பிரயாணஞ்செய்வதுண்டு. இன்பநுகர்ச்சித் தலைத்திங்களினை அந்நாட்டார் 'தேன்மதி' (Honeymoon) என்பர். பசிபிக்சமுத்திரத்திலே, தெங்கம்படப்பையோடுகூடிய பவளத் தீவுகள் அளவிற்சிறியவாயினும் பேரழகுவாய்ந்தன. இவற்றைக் குறித்து ஆங்கிலமொழியிலே கற்பனைக்கதைகளும் உண்மைக்கதை களும் எத்தனையோ பல உள.

பைரன் (Byron) என்னும் ஆங்கிலமகாகவி கடலைப் பொரு ளாகக்கொண்டுபாடிய பாடல்கள் வனப்புவாய்ந்தன. வங்கமொழி யிலே கடலைச் சிறப்பித்துப்பாடியவர் சிறந்த தேசாபிமானியாகிய சித்தரஞ்சனதாசர்.

மலையிற்பிறந்த ஆறு கடலிற் கலத்தலின் ஆற்றுவளம் கூறப் புகுந்த புலவர் மலையையும் கடலையும் பாடுதல் இயல்பு. எல்லை யில்லாத பரம்பொருளுக்கு மலையும் கடலும் உவமப்பொருளாயின.

ஓர்க்கோலை, சங்கு, பவளம், முத்து, உப்பு என்னும் ஐந்தினை யும் கடல்வளமென்ப.

'தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கம்
கப்பூரஞ் சாதியோ டைந்து'

என மலைவளன் கூறப்பட்டது.

'மலைப்பஃ றாரமுங் கடற்பஃ றாரமும்
வளந்தலை மயங்கிய துளங்குகல விருக்கை'
(சிலப்பதிகாரம்-சு)

என்னுஞ் செய்யுளடிகளிலே காவிரிப்பூம்பட்டினத்துக் கடற்றுறை முகத்திலே அசைகின்ற மரக்கலங்களும் குவிந்துகிடக்கின்ற பண்டங்களின் மலிவும் கூறப்பட்டன.

'கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
வேலைவா லுகத்து விரிதிரைப் பரப்பிற்
கூல மறுகிற் கொடியெடுத்து நுவலும்
மாலைச் சேரி'
(சிலப்பதிகாரம் சு.)

என்னும் அடிகளுள் பரதேசிகள் கலத்திலே பல்வகைச்சரக்குகளைக் கொண்டுவருதலும், தம்மிடத்து இன்னசரக்கு உள என்பதைக் கொடிகளாற் சொல்லுதலும் கூறப்பட்டன.

'கலஞ்சமைத் தற்கு வேண்டுங் கம்மிய ருடனே செல்லும்
புலங்களில் விரும்பு பண்டம் பொருந்துவ நிரம்ப வேற்றிச்
சலந்தரு கடவுட் போற்றித் தலைமையாம் நாய்கன் றானும்
நலந்தரு நாளில் ஏறி நளிதிரைக் கடல்மேற் போனான்'
(காரைக்காலம்மையார்புராணம் ௩௩.)

என்னுஞ் சேக்கிழார்பாடலினாலே கடற்பிரயாணஞ்செய்வோர் வருணனைப்போற்றுதல் கூறப்பட்டது. மேனாட்டுப்புராணங்களிலே கடற்றெய்வத்திற்கு நேப்தியூன் (Neptune) என்பது பெயர். இவர் கைப் படைக்கலம் மூவிலைச்சூலம். கடல்மீது ஆணைசெலுத்தும் பிரித்தானியாநாட்டினை உருவகித்த பிரித்தானியா என்னும் பெண் தெய்வத்தின்கையிலும் மூவிலைச்சூலம் உளது. முருகவேள்வழி பாடு சிறந்துவிளங்குந் தமிழ்நாட்டுப்புலவர் மலையைச் சிறப்பித்துப் பாடியதும், வருணன்வழிபாடு வழக்குவீழ்ந்தமையின் கடலினைப் பாடாதொழிந்ததும் இயல்பேயாம்.

---

உ

# கவியும் சால்பும்

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்.]

'திருமலி யழகுடைச் செழும்பொருள் தானே
உவகை நீர்மையது; ஆங்கவ் வுவகை
பன்னாட் கழியினும் கழியா வியல்பிற்
றண்டா வின்பந் தந்துநிற் பதுவே'

என ஆங்கிலமொழிப் பெரும்புலவராகிய கீற்சு (Keats) என்பவர் தாம் இயற்றிய எந்திமியோன் (Endymion) என்னும் பெருங்காப் பியத்திற்குத் தோற்றுவாய்கூறினர். 'அழகுடைப்பொருள் என்றும்உவகைதருவது; அழியாவின்பத்தின் நீர்மையது; ஆதலின், அதுவே புலவராற் பாடுதற்கமைந்தது' என்பது கீற்சு நிறுவிய முடிபு. இப்புலவர் தாமே மற்றொருசெய்யுளகத்து,

'அழகே உண்மை, உண்மை அழகென
உலகினில் அறிந்தோர் அறிவுபிற வேண்டார்'

எனக் கூறினர். ஈண்டு அழகிற்கு உண்மை ஒப்புடைப்பொரு ளாகக் கூறப்பட்டது.

அறிவு, இச்சை, செயல் (ஞானசத்தி, இச்சாசத்தி, கிரியா சத்தி) எனும் மனநீர்மை மூன்றனுள் அறிவு உண்மைப்பாலது; இச்சை அழகின்பாலது; செயல் செம்மைப்பாலது. உண்மை, அழகு, செம்மை என்பன முறையே அறிவு, இச்சை, செயலுக்கு எல்லையாகவும் நிலைக்களமாகவும் அமைந்தன.

மனநீர்மை மூன்றுயினும் மனம் ஒன்றே. ஆதலினுலே உண்மை, அழகு, செம்மையென்பன தம்முள்ளே ஒப்புடைய வாயின. அழகே உண்மை, உண்மையே அழகு; அழகே செம்மை, செம்மையே அழகு; உண்மையே செம்மை, செம்மையே உண்மை.

செம்மை, உண்மை, அழகென்னும் இவற்றை வடநூலார் சிவம், சத்தியம், சுந்தரம் என்பர்; ஆங்கிலநூலார் Goodness, Truth, Beauty என்பர்.

'நெஞ்சத்து நல்லம் யாமென்னும் நடுவுநிலைமையாற் கல்வி யழகே யழகு' என்புழி 'நெஞ்சத்து நல்லம்' எனச் செம்மையும், 'கல்வியழகு' என அறிவும், அழகின் வேறின்மையாதல் கூறப் பட்டது. 'உருவின்மிக்கதோர் உடம்பி'னைப் பெற்றோரும் கல்வியறி வில்லாதவழி அறிவுடையோரால் அழகிலரெனக் கருதப்படுவ ராதலின், 'கல்வியழகே யழகு' என்னுமிடத்து வந்த ஏகாரம் பிரிநிலையும் தேற்றமுமாயிற்று.

அழகும் உண்மையும் கவிப்பொருளாயினவாறுபோலச் செம்மைவயத்ததாகிய சால்பும் கவிப்பொருளாயிற்று. காப்பியத் தலைவனிடம் காணப்படும் சால்பே காப்பியக்கவிகள் விரித்துக் கூறும் பெரும்பொருள்.

வாழ்க்கையிலே சால்புவாய்ந்தோனாகிய கவிஞனொருவன் சால் பினைக் கவிப்பொருளாகக்கொண்டு செய்யுள்செய்வானாயின், அச் செய்யுள் இனிமையும் மாண்பும் உறுதியுந்தந்து மிளிருமென்பது அறிஞராயினருக்கு உடம்பாடேயாம்.

வேள்ளகால் சுப்பிரமணியமுதலியார் என்னும் தமிழ்ப்பெருங் கவியினது தனிப்பாடல்களின் தொகுதியும், அப்பெரியாரது எண்பதாம் ஆண்டுநிறைவுவிழாவிலே, மதுரைத்தமிழ்ச்சங்கத் தாரையுள்ளிட்ட தமிழறிஞர் கூறிய வாழ்த்துரை, வாழ்த்துச் செய்யுட்களின் தொகுதியும் கையகத்துள்ளன.

'புதுவதுகிளந்த யாப்பின்மேற்'றாகிய கவிதை பெருவரவிற் றாகிய இக்காலத்திலே, தொன்மைநலஞ் சிறிதுங் குன்றாத செய்யுள் செய்யும் புலவர் மிகச் சிலரேயாவர். அப்புலவர்வரிசையிலே முதற் கண்வைத்து எண்ணுதற்குரிய வேள்ளகால்கிழார் இயற்றிய தனிச்

செய்யுளகத்துக் காணப்படும் கவியழகுகள் பல துறைய. அவை அனைத்தினையும் ஆராய்ந்துகூறப்புகின் உரை பெருகுமாதலின், மக்களைத் தேவராக்கும் நீர்மையதாகிய 'சால்பு' என்னும் பெரும் பொருளினைக் குறித்து, வாழ்க்கையிலே சால்புவாய்ந்த இப்பெருங் கவி கூறிய பலகவிதைகளிலே ஒரு சிலவற்றை யாராய்ந்து அவை தம்முட் பொதிந்த அழகினை எடுத்துக்காட்டுதலே 'கவியும் சால்பும்' என்னும் இப்பொருளுரையின் நோக்கமாகும்.

'அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ, டைந்து சால் பூன்றிய தூண்,' என ஆசிரியர் திருவள்ளுவனார் சால்பிற்கு நிலைபேறுவன இவையெனக் கூறுமுகத்தாற் சால்பினது வரைவிலக் கணங் கூறினர். சுற்றத்தார்மேலேயன்றிப் பிறர்மேலு முளதாய அன்பும், பழிபாவங்களினுணாலும், யாவர்மாட்டும் ஒப்புரவுசெய்த லும், பழையார்மேற் கண்ணோடலும், எவ்விடத்தும் மெய்ம்மை கூறலுமே சால்பிற்கு நிலைபேறுவன.

'என்றும், நல்லோ ரிணக்கமே நான்இணங் கிடுக
நல்லோர் நினைவே நான்நினைக் கிடுக;
நல்லோர் உரையே நான்உரைத் திடுக;
நல்லோர் நடையே நான்நடந் திடுக;
...........................................
உயிர்களை வருத்தல் ஒழிவே னாக;
உயிர்போ மெனினுமெய் உரைப்பே னாக;
களவினைக் கனவினுங் கருதே னாக;
..............................
அயலவர் பொருளினை அவாவே னாக;
அவர்கள்தம் வாழ்வுகண் டழுக்கறே னாக;
அவர்செயும் நன்றியை அயர்த்திடே னாக;
முன்புபின் பவர்பழி மொழியே னாக;
எங்கணும் அவர்புகழ் இயம்புவே னாக;
அவர்குறை காண்டலிற் குருடனே னாக;
அவர்மறை கேட்டலிற் செவிடனே னாக;

அவர்க்கின்னா கூறலில் ஊமனே னாக;
அவர்க்கூறு செய்தலில் முடவனே னாக;
அவர்கேடு சூழ்தலில் அறிவிலே னாக;
எனைக்கெடுத் தவர்க்குமன் றியற்றுவே னாக;
வைதவர் தம்மையும் வாழ்த்துவே னாக;
வெறுத்தவ ரெவரையும் விரும்புவே னாக;
ஒறுத்தவ ருக்கும் உதவுவே னாக;
பகைவர்க்கும் அன்புசெய் பண்பினே னாக;
இத்தனை நல்லொழுக் கியைந்துளே மென்று
பெருமைபா ராட்டிடும் பிழையிலே னாக;
..........................................
என்னை எவரும் இகழினும் புகழினும்
செல்வம் என்னைச் சேரினும் தீரினும்
இன்றே இறக்கினும் என்றும் இருக்கினும்
எவ்வெவ் வின்பையும் எய்துதற் கெனினும்
எவ்வெத் துன்பையும் இரித்தற் கெனினும்
உண்மை வழுவி ஒழுகே னாக;
..........................................
எச்செய லெனினும்யான் இயற்றிட நேருமேல்
என்மனம் அமைதியை இழந்திடா தாக;
வருத்தம்என் மனத்தினை வருத்திடா தாக;
கடல்மலை வனம்இடு காடுகள் முதலா
வெருவிடு தனியிடம் மேவினே னாயினும்
பாய்புலி பிடிக்கினும் பாம்பு கடிக்கினும்
என்மனம் நடுக்கினை எய்திடா தாக;
அலையா உறுதியுற் றசைக்க வொண்ணேனாய்
வச்சிர வெற்பென வற்பினை உற்று
விருப்புறு பொருள்கள் விட்டு விலகினும்
வெறுப்புறு பொருள்கள் மேவிச் சேரினும்
ஒழுக்கம் வழுக்கா உளத்தே னாக;'

எனக் கவி ஆண்டவனை வேண்டுமுகத்தால் மேலும் மேலும் பெறுதற்குத் தாம் அவாவிய சால்பு எனும் அழியாச்செல்வத்தின் நல்லியல்புகளை வகுத்துரைக்கின்றார்.

யாம் முன்னர்க் காட்டிய ஐந்திேனாடு 'அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொன் னான்கும் இழுக்காவியன்ற அற'மும், 'அஞ்சாமை யீகை அறிவு ஊக்கம்' எனும் நான்கும், குடிமையும், மானமும், பெருமையும், பண்புடைமையும் இதனுட் கூறப்படுதல் காண்க.

'நல்லொழுக் கத்துடன் வாழ்தலே நீடித்த
நல்வாழ்க்கை யாகும் நடைபிறழ்ந்த
புல்லொழுக் கம்முடை யோர்நீடு வாழ்ந்தாலும்
பொன்றின வர்களே யென்றறிவீர்' எனவும்,

'உண்மைக்கு மேலாம் மதமில்லை; எல்லா
உயிர்க்கன்பின் மிக்கதோர் பத்தியில்லை;
வண்மைக்கு மேலுப காரமில்லை; நல்
வசனத்தின் மேலுப சாரமில்லை' எனவும்,

'ஒக்க வூக்கமோ டுறுதிநம் உளத்தினுக் குதவி' எனவும்,

'விண்ணி டிந்து விழுந்திடு மாயினும்
மண்ணில் நீதி வழங்கக் கடவதே' எனவும்,

..........................................

'மெய்ம்மைதேர் அறிவினை மேவி யுள்ளவர்
செம்மனப் பாக்கியச் சிறப்பின் ஒப்பிலார்;
தம்மைத்தாம் உடையர்; அத்தகைமை சார்ந்திலா
மம்மர்மன் னவரினும் சிறந்த மன்னரே' எனவும்,

'உண்மையி னும்முய ரொருமத மும்மிலை;
அனைத்துண் மையினுக் களவிலை யாதலால்
உண்மை யனைத்தும் உடைய மதமிலை;
உண்மை யொன்றும் உறுமத மும்மிலை;
எம்மதம் எவ்வள வுண்மையொ டியையுமோ
அம்மதம் அவ்வள வுயர்வின தாமால்;
மெய்யர் இவர், பொய் வேடத் தினர்இவர்,
என்ன ஐயுற வின்றி அறியுமாறு
உள்ளத் துள்ளதை உணரவல் லார்க்கலால்

மற்றவர் உண்மை மதமறி வரிதால்;
மனிதனே மதத்தால் மதியா தொழுக்கால்
மதித்தலே உண்மை மதிப்பா குங்காண்;
"கருமமே யல்லாது பிறிதென் கண்ட"தென்
றுரைசெய் கம்பன் உட்கருத் திதுவே,'

எனவும் வருபவற்றுள்ளே சால்பின்துறை பல செவ்வியுறத் தரப் பட்டிருத்தல் காண்க.

வெள்ளகால்கிழாரது வாழ்க்கையிலும் செய்யுளிலும் இயைந்து நின்ற சால்பின்பொலிவினை உற்றுநோக்குங்கால்,

'ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்
போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்
அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை
அறிவெனப் படுவது பேதையார் சொன்னோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மறாஅமை
நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை
.........................................
பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்,'

எனும் நல்லந்துவனார்கூற்று நினைவிற்கு வருகிறது.

இம்முதுபெரும்புலவர் நம்மனோரை நோக்கி, ரூபேர்ட் பிரவுணிங் (Robert Browning) எனும் ஆங்கிலமகாகவியின் உரையே தம்முரையாக,

'என்னொடு
யாண்டுபல வாக நீவிரும் வாழுமின்;
காண்டகு செம்மை ஈண்டுநற் றுரிய;
நாள்பல வாக நலம்பல பெறுதவீர்;
வருநாள்,
பின்னவைக் காக முன்னவை யினைபந்தன;

"அனைத்தும் ஒருபிழம் பதனுள் இளமை
ஒருபாற் பயனை உணர்த்தும்; மற்றொருபால்
அமைதியுங் காண்மின்; அச்சம் அகற்றுமின்;
நாதனை நம்புமின்;" என அவன் நவின்ற
போதம் உளநம் வாளுள் அனைத்தும்
அவன்திருக் கரத்தில் அமைந்தன கண்டீர்,'

என அறிவுரை கூறி வாழ்த்துவார்போலும்.

இவரை வாழ்த்திய தமிழ்ப்புலவரது செய்யுட்பாகங்கள் சில வற்றைத் தருகின்றோம்.

'தொண்டை மண்டல முதன்மையோர் மரபினிற் றோன்றி
எண்டி சைச்சனும் தன்பெயர் வழங்கவந் திருநீர்
மண்ட லத்தையாள் மன்னவர் மகிழ்வுடன் வழங்கு
திண்டி றற்பெறு பட்டமும் புனைதரு சீலன்'

'செந்த மிழ்க்கொரு தாயக மெனப்புவி செப்ப
வந்த மாமது ரைத்தமிழ்ச் சங்கசா வலரொ
டெந்த நாளுநற் றமிழ்தழைத் திடமுயன் றிடலே
முந்து மாதவ மெனக்கொளு முத்தமிழ்ப் புலவன்'

'மிக்க கேளிருக் கினொருரு மெய்ந்நெறி வழுவா
மக்க ளும்பிறர் யாவரு மாண்புபெற் றுயர்தற்
கொக்கு மென்றுதன் சொற்செயல் குணமெலா மொருங்கு
தக்க கட்டளை யாக்கொளத் திகழ்ந்திடு சதுரன்'

'மாசில் உள்ளம் தூய ஒழுக்கம்
ஈசற் கன்பு தேசுறு செல்வம்
என்னும் பெருமைகள் துன்னும்
..................................
திருவுடைச் சீர்சால் பெரியர்'

'தொண்டை மண்டலத் தொல்வே ளாண்குலப்
பண்டைநற் பண்புகள் பலவும் பாங்கினில்
விளங்குங் குலநல விளக்கே'

'பணத்தால் மேன்மைக் குலத்தால் நல்லங்
கணத்தால் உயர்கவி மணத்தால் ஆயிரம்
முழுமதி நோக்கிய செழுமையாற் பெரியோன்'

என அவையகத்தார் கூறிய இவையனைத்தும் இவர்க்கு ஒவ்வுவ வாதலின், யாமும் இவர்தாம்,

'குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையிற்
காதலின்பத்துத் தூங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்கா றின்மை அவாவின் மையென
இருபெரு நிதியமும் ஒருதா மீட்டும்
தோலா நாவின் மேலோர்'

ஆமென அறிந்து உளமகிழ்வெய்துகின்றோம்.

---

# பண்டைக்காலத்து நாகரிகம்

[ ஸ்ரீ. த. இராமநாதபிள்ளையவர்கள், B.A., (LOND.) ]

கசசச-ஆம் பக்கத் தொடர்ச்சி.

## சீனர்மதில்

இன்றும் வியப்பினைவிளைக்கும் மதில் கூ என்னும் கானவரைத் தம்நாட்டினுள் நுழையவிடாமல் காத்தற்கு ஆழிவேந்தன் ஷின்ஷி உவாங் என்பவனால் கி. மு. மூன்றும்நூற்றாண்டில் கட்டப்பட்டது. அக் கூவென்போரே ஹூணராயினர். அக்காவன்மதில் 200 மயில் நீளமும் 30 அடி உயரமும் 25 அடி அகலமும் உடையது. அம்மதில் கட்டப் பத்தாண்டு கழிந்தன. அதேகாலத்திலேதான் 10,000 மக்கள் கூடுதற்குரிய மண்டபம் ஒன்றும் கட்டப்பட்டது. உவாங் தி வேந்தனாக, பகைவர் யாண்டும் கலகம் விளைத்தனர். கி. மு. 207-ல் சே. யோ. கேயோ என்னும் வித்திலன் வேந்தனைக் கொன்றான்.

## ஹான்வம்சம்

கி. மு. 206 முதல் கி. பி. 24 வரை ஹான்வம்சத்தினர் அரசாண்டனர். கி. மு. 206-ல் லியுபாங் என்பான் ஆழிவேந்தனாயினன். அவன்பட்டம் கே. யோசு என்பது. கி. மு. 193-ல் அவன் இறந்தான். அவனுடைய மகன் இளைஞனாகலின், தாய் அரசியலை நடத்தினாள். எழுவருடம் கழியுமுன் இளைஞன் இறந்தானாகத் தாய் முடிபெற்று அரசாண்டாள். அரசி தன் கொழுநனின் காமக்கிழத்தியின் கைகால்களை வெட்டிக் கண்ணைப் பிடுங்கி நாவையும் காதுகளையும் அரிந்தனள். அவ்வண்ணம் மானபங்கப்படுத்தியபின் அவளைச் சாணக்குன்றில் இட்டனள். அரசி இறந்தபின் அவளுடைய கொழுநனின் மற்றொரு காமக்கிழத்தியின்மகன் வேந்தனானான். அவன்

பெயர் வேந்தி என்பது. அவன் யாதொரு புத்தகத்தையும் எரிக்கப் படாதென விளம்பினன். அவன் வாசகசாலை ஒன்றை நிறுவினன். அவன் நீதிப்பிரமாணங்களை முறைவகுத்துக் கொடுங் குற்றம் செய்தோருக்கே கொலைத்தண்டனைவிதிக்கலாமென முரசறைவித்தான். அவன் ஒருவன்குற்றத்திற்காக அவன் குடும்பத் தினரைத் தண்டிக்கும்வழக்கத்தை நிறுத்தினன்.

## ஹூணர்

உவாங்னு என்னும் ஹூணர் சீனருடைய நாடுகளில் சூறையாடினர். ஹூணர் ராட்டறி மங்கோலியா என்னும் தேயங்களில் பட்டிமேய்த்துத் திரிந்த நாடோடிகள். அவர்கள் பெரிய அரசை நாட்டிச் சீனரைவென்றதுமன்றி உரோமருடைய இராச்சியத்திலும் சூறையாடினர். இந்த ஹூணரில் ஒருகூட்டத்தினரே இந்துநாடு புகுந்து பெரிய இராச்சியம் ஒன்றை கி. பி. 5-ஆம் 6-ஆம் நூற்றுண்டுகளில் நாட்டினர். ஹூணரையே இந்தியர் அவுணர் என அழைத்தனர்போலும். இது நிற்க.

கி. மு. 156-ல் சிங்தி என்னும் மன்னன் ஹூணப்பெண்ணை மணமுடித்தபோதிலும் சீனருக்கும் ஹூணருக்கும் நட்பு ஏற்பட்டிலது. கி. மு. 140-ல் வூதி என்னும் வேந்தன் ஹூணரோடு பொருதான். சீனர் சாங்சங் என்னும் தூதனை அனுப்பி ஒக்கஸ் நதிக்கரையில் வதியும் சிதியரிடம் துணையிரந்தனர். இந்த சாங்சங் என்பவனே திராட்சைப்பழம் மாதுளம்பழம் என்பவற்றைச் சீனநாடுகளுக்குக் கொண்டுபோனான். அக்காலத்திலே சீனர் பார்தியரோடு நட்பாயிருந்தனர். கொச்சின்சீனவும் தொங்கின்நாடும் சீனருடைய ஆட்சிநாடுகளாயின. அவை கி. பி. 1000-ல் சுவாதீனம்பெற்றன.

கி. மு. 73-ல் ஆண்ட வேந்தன் சேயோ நிலவரியைப் பெருது விட்டான். சிறைச்சாலைக்கணக்கன் ஒருவன் ஹசுவான் தி என்பவனைத் தீவினையாளரின்கையிலிருந்து தப்பவைத்தான். ஹசுவான்தி என்பவன் வேந்தனானவுடன் சிறைக்கணக்கனின் மகளை மணந்து இராணியாக்கினனும். கி. பி. 6-ஆம் ஆண்டு யுவான் என்னும் வேந்தன் ஹூணரோடு பொருதான். அவன் இறந்தபின் சேங்தி

என்பவனும் ஆய் இத்தி என்பவனும் அரசுசெலுத்தினர். அவ்விருவரும்சிறுவர்களாகலின் அவர்களுடையபாட்டி பிங்தி அரசியலை நடாத்தினுள். அவருடைய அமைச்சன் வாங்மாங் அவளை நஞ்சூட்டிக் கொன்று அரசை வெளவினன். அவன் நூல்நிலையங்கள் பல நாட்டினன். கி. பி. 23-ல் பகைவர் அவனைக் கொன்றனர்.

சிற்றரசுகள்

கி. பி. 23 முதல் கி. பி. 221 ஈருக உள்ளகாலத்தில் மற்றொரு ஹான்வமிசத்தினர் அரசாண்டனர். அக்காலத்தில் பெண்கள் பலர் அரசுகட்டில் ஏறினர். அரசிகள் வித்திலரை அமைச்சராக்கி அரசியலைநடாத்தினர். அக்காலத்தில் வித்திலர் 2000 பேர் கொல்லப்பட்டனராதலால் மக்களை வித்திலராக்குதல் பெருவழக்காயிருந்ததுபோலும். மக்களை வித்திலராக்கும் வழக்கம் சீனராலும் துருக்கராலும் உரோமராலும் அராபியராலும் கையாளப்பட்டது. வேந்தன் சியன்தி என்பானைப் படைத்தலைவன் தங்சோ என்பவன் கொன்று அரசுகட்டில் ஏறினன். கி. பி. 192-ல் தங்சோ கொல்லப்பட்டான். செம்மார்குலத்தினன் ஒருவன் படைச்சேவை செய்து கி. பி. 185-ல் ஒரு தலைவனுனன். அவனே தங்சோ என்பவனைக் கொன்று அரசுபுரிந்தான். சீனு பல அரசுகளாகப் பிரிய, அரசியற்குழப்பங்கள் மிகுந்தன.

தென்சீனுவில் ஓர் இராச்சியம் நாட்டப்பெற்றது. அதன் தலைநகர் நாங்கிங். ஆங்கு சுன்சுயான் அரசனுனன். அவனுடைய வம்சம் வூ எனப் பெயர்பெற்றது. அவன் தென்சீனுவில் ஆண்ட காலத்தில் வடசீனராச்சியத்தை வைவம்சத்தினர் ஆண்டனர். மற்றொரு அரசு மேற்குச்சீனுவில் ஷிஹான் என்பானல் நாட்டப்பட்டது. இம்மூன்று இராச்சியங்களும் கி. பி. 265-ல் இகலலாயின. மூன்றும் ஒன்ருேடொன்று பொருது அழிவெய்தின. அக்காலத்தில் துங்கூசியர் என்னும் கானவர் சீனநாடுகளில் சூறையாடினர். பின்பு வடசீனு தென்சீனு என இரு அரசுகள் நிலைத்தன. வடசீனு கித்தே(கதே) எனப் பெயர்பெற்றது. வடசீனுவில் கி. பி. 420-ல் சங்வம்சத்தினர் ஆண்டனர்; தென்சீனுவில் லியங்வம்சத்தினரும் அவர்பின் சேன்வம்சத்தினரும் அவர்பின் சுயி வம்சத்தினரும் அரசாண்டனர்.

### தாங்வம்சம்

கி. பி. 589-ல் யாங்சியன் என்னும் படைத்தலைவன் அரசை வெளவினுன். அவனுடைய மகன் தகப்பனைக் கொன்று வேந்தனுயினன். அவன் கி.பி.605-ல் நீர்வாய்க்கால்களை அகழ்வித்தான். அவன் அறிஞனுயினும் சிற்றின்பப்பிரியனும். இவனுடைய வம்சம் தாங்வம்சம் எனப் பெயர்பெற்றது. 'தாங்'வம்சத்தினர் கல்வியை வளர்த்தனர். அவர்காலம் சீனமொழியின் செம்மொழிக்காலமெனப்படும். புலவன் லிதைபோ என்பவனும் புலவன் துபி என்பவனும் பாடசாலைகள் பல நிறுவினர். வேந்தன் லியுவான் வித்தைவல்லோரையும் கலைவல்லோரையும் புரந்தான். அவன் மகன் கி. பி. 618-ல் கையோசுங் என்னும் நாமத்தைத் தரித்தான். கையோசுங் தன் தந்தையின் காமக்கிழத்தியாகிய வூகேள என்பவளிடம் புத்திகேட்டான். அவள் பிறிதோர்காமக்கிழத்தியின் அவயவங்களை வெட்டினுள். கையோசுங் இறக்க வூகேள கொடுங்கோல் செலுத்தித் தன் குமாரரைக் கொன்ருள். கி. பி. 705-ல் அவள் கொல்லப்பட்டாள். பின்பு 21 ஆண்டு வனவாசம்செய்திருந்த சங்சங் என்பான் அரசபதவியைப் பெற்ருன். அவன் தன் மனைவிக்கு அஞ்சி நடந்தான். அங்ஙனம் ஒழுகியபோதிலும் அவனை அவள் நஞ்சூட்டிக் கொன்றனள். கி. பி. 713-ல் லங்சி அரசனுனன். அவன் ஆடம்பரவாழ்க்கையை வெறுத்தோன். அவன் தன்குமாரரின் காமக்கிழத்தியாகிய யாங்கைபை என்பவளிடம் புத்திகேட்டொழுகினன்; அவள் அணிதற்கு இரத்தினம்வாங்கிப் பொருளெல்லாம் செலவுசெய்தான். வேந்தனைச் சேவித்த படைவீரன் ஒருவன் இடித்துரைத்தானுக அவனைக் கொல்லும்படி வேந்தன் கற்பித்தான். அவ்வளவிற் குழப்பம் தொடங்கியது. ஒருவர்பின் ஒருவராகப் படைத்தலைவரே முடிபெற்றனர். கி. பி. 919-ல் சேயோசங் அரசாண்டான்; கி. பி. 923-ல் அவனை லிற்ஷன்ஷி கொன்று முடிபெற்ருன். கூத்தர் கலகம்விளைத்து லிற்ஷன்ஷி என்பவனைக் கொன்றனர். கி. பி. 932-ல் தான் முதல் முதல் அச்சிடுதல் தொடங்கியது.

## சின்வம்சம்

சின்வம்சத்து முதல்வேந்தன் ஷி-சின்பாங் என்பான் கித்தரிடம் துணைபெறுதற்கு ஆண்டொன்றுக்கு 300,000 பட்டாடைகள் கொடுத்தானும். கித்தர் அவனைக் கலைத்தனர். சீனர் கித்தரோடு பன்முறை பொருதனர். கி. பி. 976-ல் தைசங் என்பான் கித்தரைக் கலைத்தோட்டினான். அவன் மகன் செங்சங் என்பான் கித்தருக்குப் பொருள்கொடுத்து நட்பாக்கினான். கி.பி.1064 முதல் 1068 வரையும் இங்சங் ஆண்டான். பின்னர் வெண்சங்செக் சிறுவனாகலின் அவன்தாய் அரசியலை நடத்தினாள். கி. பி. 1086 முதல் 1100 வரையும் வித்திலபே அமைச்சராகி அரசியலை நடாத்தினர். கி. பி. 1126-ல் கின்னர் படையெடுத்துச் சீனவேந்தனைப் பிடித்தேகினர். கி. பி. 1127-ல் கேயோசங் என்பவன் நாங்கிங் என்னும் தலைநகரில் அரசுபுரிந்தான். அவன் கின்னருக்கு அஞ்சி காங்சௌ என்னும் நகரை இராசதானியாக்கினான். அவன் கின்னரை நட்பாக்குதற்கு இருநாடுகளை அவர்களுக்கு அளித்தான்.

## மங்கோலிய ஹூணவேந்தன் சிங்கிஸ்கான்

கின்னரை ஹூணர் நெருக்கினர். கி. பி. 1230-ல் ஹூணர் பீக்கிங் நகரைக் கைப்பற்றினர். ஹூணர்மன்னன் சிங்கிஸ்கான் மங்கோலியா ருஷியா துருக்கி சீனா என்னும் தேசங்களை ஆண்டான். அவன் இறவாமருந்து தேடினானும். அவன் இறந்தபின், அவனுடைய மூன்றாம் மகன் ஒகோதை அரசனாகித் திபேத்தையும் தனது ஆட்சிநாடாக்கினான். கி. பி. 1233-ல் அவன் கின்னரைக் கலைத்ததுமன்றிச் சீனர்வேந்தன் சங் என்பவனையும் சயித்தான். சீனர் தம் சுவாதீனத்தை இழந்தபோதினும் அவர்கள் தம் நாகரிகத்தை அழியவிடவில்லை. ஹூணர் சீனரைவென்றனராயினும் சீனரோடுகலந்து தம் நாகரிகத்தை இழந்தனர்.

## ஆழிவேந்தன் குபிலைக்கான்

ஹூணவேந்தருள் புகழ்பெற்றோனான குபிலைக்கான், கி. பி. 1260-ல் ஆழியுருட்டினான். அவனுடைய சந்ததியார் யுவான் வம்சத்தினர் எனப் பெயர்பெற்றனர். அவர்களுடைய ஆணை இந்தியசீனா என்னும் குடாநாடெங்கும் சென்றது. கி. பி. 1281-ல்

குபிலேக்கான் ஜப்பான்தீவுகளைப் பிடிக்கும்படி தன் கப்பற்படையை ஏவினன். கப்பல்கள் புயலில் அகப்பட்டு உடைந்தன. குபிலேக் கான் மங்கோலியமொழியில் சீனநூல்களைப் பெயர்ப்பித்தான். உலகமுழுவதும் பிரயாணஞ்செய்துபார்த்த இத்தாலியன் மார்க் கோப்போலோ குபிலேக்கானுடைய அவையைத் தரிசித்து ஆங்கு அரசாங்கசேவைசெய்திருந்து பல குறிப்புக்கள் எழுதினான். சீன மும் கடாரமும் இந்தியசீனாவும் திபேத்தும் குபிலேக்கானுடைய ஆட்சிநாடுகளாயினவாம்.

மங்கோலிய ஆழிவேந்தன் தீமூர்

ராட்டறிமன்னர் குபிலேக்கானுக்குத் திறையளித்திருந்தனர். தீமூர் என்பவன் ஆழிவேந்தருக்குத் திறைகொடாது சுவாதீன னாயினன். இத் தீமூர் தடமார்பன், வெற்றிவேலன், படை வல்லோன் எனப் புகழ்பெற்றான். தீமூர் மங்கோலியவேந்தருள் புகழ்மிக்கோன். அவன் மங்கோலியா, ராட்டறி வடசீனா, துருக்கி, பார்சியா என்னும் நாடுகளை ஆண்டான். தீமூர் ஒருமுறை இந்தியாவி னுட் புகுந்து கங்கைக்கரைவழிச்சென்று சூறையாடி ஏகினன். தீமூர் அரசுபுரிந்தகாலத்தில் சீனாவில் புத்தமதம் புத்துயிர்பெற் றது. தீமூர் துஞ்சியபின் மங்கோலியருடைய வலி குன்றியது.

மிங்வம்சம்

கி. பி. 1368-ல் சன்யுவான்சங் மங்கோலியரைக் கலைத்துப் பீக் கிங்நகரில் அரசாண்டான். அவன்தான் மிங்வம்சத்தை நாட்டிய வன். அவன் அன்னநாட்டாரிடம் திறைபெற்றான். மிங்வம்சத் தினர் ஆண்டகாலத்தில் மங்கோலியரும் சீனரும் இடைவிடாது பொருதனர். ஜப்பானியரும் சீனருடைய கரைநாடுகளில் இறங்கிச் சூறையாடினர். மிங்வம்சத்தினர் கலைகளை ஓம்பினர். கி. பி. 1409-ல் விண்ணூல் பூகோளநூல் ஆயுள்வேதம் மாந்திரிகநூல் பௌத்தநூல் தேயோநூல் என்பவை ஐவரால் இருபதின்மரின் துணையோடு 60 புத்தகமாகத் தொகுக்கப்பட்டன. ஓவியமும் பரக்கப்பட்டது.

## மாஞ்சுவம்சம்

கி. பி. 1515-ல் போர்த்துக்கேயர் பீக்கிங் என்னும் தலைநகரில் பண்டமாற்றுச்செய்யத்தொடங்கினர். அக்காலத்தில் மஞ்சூரியாவில் உறைந்தோர் சீனத்துட் புகுந்து மிங்வம்சத்தினரைப் புடைத்துக் கலைத்தனர். பின்பு கி. பி. 1583-ல் மாஞ்சியர் இருகட்சியினராகிப் போராடினர். சீனர் நூர்க்காச்சு என்பானுக்கு எதிராக நிக்கான் என்பானுக்குத் துணைபுரிந்தனர். நூர்க்காச்சு வென்றியடைந்து கி. பி. 1616-ல் சீனரோடு போர்தொடர்ந்தான்.. அவன் முக்டன் நகரைப்பிடித்து தன் இராசதானியாக்கினான். தைசாங் என்பான் பீக்கிங்நகரைத் தாக்கினான். நகரத்தோர் கட்சிபிரிந்து கலகப்பட்டனர். அத்தருணத்தில் மாஞ்சியர் வைகைகுவான் என்னும் போரில் வென்று பீக்கிங்நகரைப் பிடித்தனர். கி. பி. 1645-ல் மாஞ்சியர் நாங்கிங்நகரையும் கைப்பற்றி ஆங்கிருந்த மன்னனையும் கொன்றனர். சீனத்தில் மாஞ்சுவம்சத்தினர் மூன்றுநூற்றாண்டு அரசுபுரிந்தனர். கி. பி. 1662-ல் மாஞ்சுவேந்தன் காங்ஷி மங்கோலியரோடு போர்புரிந்தான். அவன் நீதிப்பிரமாணங்களை முறை வகுத்துச் செங்கோலோச்சினான். கி. பி. 1736-ல் அரசுபுரிந்த சியேன் லங் மங்கோலியரோடு பொருதான். அக்காலத்தில் இமயமலைச்சாரலில் வதியும் நீர்வளநாட்டினர் சீனரோடு பகையாயினர். கி. பி. 1796-ல் சீனத்தில் சியாங்சிங் என்னும் மாஞ்சுமன்னன் ஆணை செலுத்தினான். அவன் ஆண்டகாலத்தில் கலகக்காரர் அரசியலைக் குலைக்கச் சூழ்ச்சிசெய்தனர்.

## சீனரும் மேனாட்டாரும்

19-ஆம் நூற்றாண்டில் மேனாட்டார் சீனரோடு வாணிகஞ் செய்யவிரும்பினர். ஆங்கிலதூதன் ஒருவன் சீனவேந்தனின் அவையில் நிலத்தில் வீழ்ந்து மரியாதைசெய்யநேரிட்டது. அங்ஙனம் மரியாதைசெய்தலை ஆங்கிலர் வெறுத்தனர். கி. பி. 1846-ல் ஆங்கிலர் சீனமன்னருடைய வேண்டுகோளைப் பொருட்படுத்தாமல் சீனரோடு அபின்வியாபாரம் செய்தனர். சீனர் அபின்வியாபாரத்தை நிறுத்தமுயன்றனராக ஆங்கிலர் போர்முரசறைந்தனர். ஆங்கிலர் இந்தியப்படைகளை ஏவிப் போரைநடாத்தினர். சீனர்

கட்சிபிரிந்து கலகப்பட்டிருந்தமையால் தோல்வியடைந்தனர். கி.பி. 1858-ல் ஆங்கிலர் தம் படைவலியால் ஐந்து துறைகளில் பண்டம் மாற்றும் உரிமைபெற்றனர். இதை அறிந்த பிராஞ்சியரும் சீனரை வெருட்டி வணிகவுரிமை பெற்றனர். பின்னர் சர்மானியரும் ருஷியரும் சிலதுறைகளில் தம்மாணையைச் செலுத்தத் துணிந்தனர்.

### கிறித்துமதம்

கி. பி. 505-ல் உரோமரும் கிரேக்கரும் சீனத்துக்குச்சென்று பட்டுப் பெற்றனர். கி. பி. 845-ல் உரோமருடைய வாணிகம் கெட, அராபியர் வாணிகம்செய்யத்தொடங்கினர். அராபியர் பலர் சீனத் துறைகளில் உறைந்து முகமதியமதத்தைப் பரப்பினர். கி. பி. 1248-ல் கதலிக்கர்சமய முதற்குரு இன்னசந்து என்பவரும், பிராஞ்சு தேசமன்னன் லூயி என்பவனும் சிங்கிஸ்கானுக்குத் தூது அனுப்பினர். கதலிக்கர்குரு பிராஞ்சிஸ்சேவியர் தம் மதப்பிரசாரம்செய்வதற்குச் சீனத்திற்குச்சென்றார். கி. பி. 17-ஆம் நூற்றாண்டில் கிறித்தவர் மதவேற்றுமைபாராட்டிக் கலகப்பட்டமையால் சீனவேந்தரால் துன்புறுத்தப்பட்டனர். மேனாட்டுப் பல்வகைக் கிறிஸ்தவமதத்தினரும் தத்தம் மதத்தைப் பரப்பமுயன்றமையால் கலகம்விளைந்தது. சீனர் பெருந்தொகையினர் கதலிக்கர்மதத்தைத் தழுவினர்.

கிறிஸ்தவமதத்தினன் சன்யாட்சேன் மாஞ்சுவேந்தனுக்கு எதிராகச் சூழ்ச்சிசெய்தான். சீனவரசியற்புரட்சிக்குச் சன்யாட்சேன் என்பவனே பாத்திரன் என மொழியலாம். 1912-ல் குடிகள் வேந்தனைக் கலைத்துக் குடியரசை நாட்டினர். மேனாட்டார் கட்சிகளுக்குப் படைக்கலங்கள் உதவிப் பொருளீட்டினர். சீனர் வடசீனர் தென்சீனர் எனப்பிரிந்து அமர்புரிந்தனர். அதன்பின் 1932-ல் ஜப்பானியர் சீனரை ஒட்டிக் கலைத்து மஞ்சூரியாவைத் தம் ஆட்சிநாடாக்கினர். ஜப்பானியர் அவ்வளவில்நில்லாமல் சீனம் முழுவதையும் ஆளமுயலுகின்றனர். 1938-ல் ஜப்பானியர் சீனக்கடலில் தம்மாணையைச் செலுத்தவெண்ணிச் சீனத்தின் தலைநகராகிய நாங்கிங் நகரையும் வணிகத்துறைகள் பலவற்றையும் கைப்பற்றினர். இங்ஙனம் ஜப்பானியர் ஆங்கிலர் முதலிய மேனாட்டினர் சீனத்துறைகளில்செய்யும் வணிகத்தைத் தாம்தாம் செய்ய முயலுகின்றனர்.

---

275 குரும்பை - தெங்கு பனை என்பவற்றின் இளங்காய். அணி - அணிந்த. தும்பி - வண்டு. ஆர்த்து - ஒலித்து. இடைதரும் - ஒதுங்கும். மிளிர் - விளங்குகிற. நீலம் - நீலமலர். சுரும்பு - (ஆண்) வண்டு. சுரும்பினம்-ஆண்வண்டின்கூட்டம். தொடர்காலை-தொடரும்போது. ஓச்சுவார்-ஓட்டுவார். அவற்றை-அச்சுரும்பினங்களை. மன், ஓ அசை. கொடிபோல்பவர் (ஆன சிலதியர்) கோதையர்மார்பினில் அணி நீலமலரை இது சுரும்பாமெனச் சுரும்பினம் தொடர்காலை அவற்றை ஆடவர் மாலைகொண்டோச்சுவார்: என்றபடி.

276 புனை - அலங்கரிக்கப்பெற்ற. மாலையின் - பூமாலைபோல. பெடைவண்டு - பெண்வண்டு. ஏகும்வேலை - ஏகும்போது. மனைப்பொழில் - மனையையடுத்துள்ள சோலை. நகர்ப்புறப்பொழிலிற் புனலாட்டயர்ந்தும் பொழிலாட்டயர்ந்தும் மாலையில் மனைக்குத் திரும்பிய மகளிருடன் அப்பொழிற் பெடைவண்டோடுகூடிய சுரும்பினம் தொடர்ந்துசெல்லுங்காலை அவர் மனைப் பொழிற்சுரும்பொடும் விருந்துண்ணும் என்றவாறு.

277 சிறுவில் - கைவில். கதிர் புகாப் பொதும்பருள் - சூரியகிரணமும் உள்நுழையாத சோலையினுள். தேமாத்து - தேமாமரத்தின்கண். உடக்கி - நாணிற்றொடுத்து. வாளி - அம்பு. அவை - அம்மாங்கனிகளை. அக்குழகர் - அவ்விளைஞர்கள். தறுகண் - அஞ்சாமை. கணைதொடினும் - அம்பெய்யினும். இளைஞர் சோலையில் மாங்கனிகளையெய்ய, வாளியோடு அக்கனிகளைக் கைத்தலத்தேந்திய வானரங்கள் அவ்விளைஞர் தம்மேற் கணைதொடுக்கினும் தாம் கைக்கொண்ட கணையால் தடுப்பனவாயுள்ளன என்றபடி.

278 பிறையம்பு - அர்த்தசந்திரபாணம். கொம்பர் - கொம்பு. இறுல் - தேன்கூடு. இயக்கி - செலுத்தி. உற்பலம் - கருங்குவளை. புரை - ஒத்த. பொற்கலம் - பொன்னாற்செய்த பாத்திரம்.

279 நாகத்து உம்பரின் - சுரபுன்னைமரத்தின் உச்சியில். நாகமது உற - குரங்கு வந்து பொருந்த. அது பகுதிப்பொருள்விகுதி. நகை - ஒளி. மதியின் ஆகத்து உம்பர்வீழ் அமுதம் உண்டு - மதியினிடத்துள்ள தேவரும் விரும்பும் அமுதத்தை உண்டு. அளிய - எளிய. பூகம் - பெண்குரங்கு. குலம் - கூட்டம். மாகம்-தேவருலகம். உம்பர்-தேவர். வானரமங்கைமார் - 1. தேவருலகத்து அரமகளிர். 2. குரக்குமகளிர். நாகத்தும்பரின் நாகமது உற, பூகத்தின்குலம் நகைமதியின் ஆகத்து உம்பர்வீழ் அமுதமுண்டு களித்தலின் வையம் அவற்றையும் உவப்பின் மாகத்தும்பர் வானரமங்கைமாரெனும்: என இயைத்துப் பொருளுரைக்க.

280 விழித்தகட்குவளையின் - 1. அலர்ந்த தேனொடுகூடிய குவளைப் பூக்களால். 2. நோக்கிய கண்ணாகிய குவளைப்பூவினால். மிளிர் - விளங்குகிற. கூடல் - கூடற்சுழி. அஃதாவது தலைவரைப் பிரிந்த மகளிர் கண்களை மூடிக்கொண்டு நிலத்தே வலயமாகக் கீறுவது; அது தொடங்கிய இடத்தே வந்து பொருந்துமாயின் பிரிந்த நாயகர் வந்து பொருந்துவரென்பது மகளிர் குழுவழக்கு. வளை - சங்கு. தலைவரைப்பிரிந்த மகளிர் மணலில் அவர் வரவு குறித்துக் கூடலிழைக்க, அது தொடங்கிய இடத்தே வந்து பொருந்துதலால் தம் நாயகர் வரவறிந்து, இழைத்த கூடலை அழியாது செல்ல, அதனைச் சங்குகள் தவழ்ந்தழிக்கும் என்றவாறு.

281 முகை - அரும்பு. நற - தேன். துற்றி - உண்டு. தாய - தாவிய. கதுவலின் - தாக்குதலால். நறு - தேன்.

282 நியதியும் - நாள்தோறும். மாரி - மேகம். 'கடவுளர்குரவோர்க்கு' என்றும் பாடம். கோபாலர் - இடையர்.

283 மேதி - எருமை. காவினம் - பாரிஜாதம். கருங்கடல்வளாகம் - கரிய கடலாற் சூழப்பட்ட பூமி. காவினம்................கருங்கடல்வளாகமீதளித்தே - கண்ணன். குருகூரிலுள்ள இடையர்மனைகள், கண்ணனவதரித்த திருவாய்ப்பாடியின் மாடங்கள்போலச் சிறப்புற்றுவிளங்குவ என்றபடி.

284 மணிநிரைத் தொடிக்கை ஆய்ச்சியர் - இரத்தினவரிசைகளையுடைய வளையணிந்த கைகளையுடைய இடைச்சியர். அளி - வண்டு. பூவை - காயா. அந்நிறத்தவன் - பூவைப்பூவின்நிறமுடைய கண்ணன். மூவினம் - பசு, எருமை, ஆடு என்பன.

285 மயன் - தேவர்தச்சன். நயனதாமரைமாயன் - தாமரைமலர் போன்ற கண்ணையுடைய திருமால். சிற்பிகள் மாயனுதியர்தமை நாளும் உலோகத்தின் மரத்திற் செயல்பயின்றுள சிற்பம் எத்திசையும் சிறந்தது என்க.

286 கலன் - ஆபரணம். பீடிகை - அணிகலச்செப்பு.

287 உலப்பு - குறைவு. கன்னுவர் - கன்னார். கஞ்சமண்டிலம் - வெண்கலத்தாலியன்ற வட்டத்தகடு. கணிகையர்-பரத்தையர். கறங்கும்-ஒலிக்கும்.

288 கொளுத்தி - பொருத்தி. துன்னர் - தைப்போர். துன்னலின் - தைத்தலால். உரு - மெய்(ப்பை). மழவு - இளங்குழவி. தைப்போர் ஒவ்வோர் உறுப்பாக இணைத்துத்தைக்கப் பூரணவுருவுற்ற மெய்ப்பை, கருப்பையினுள் திங்கள்தோறும் சிலசில உறுப்புக்களாக நிரம்பிப் பூரண உருவுடைந்த இளங்குழவிபோல் விளங்கும் என்றபடி.

289 உருத்தொழில் - சித்திரவேலை. கஞல - மிக. சமைதல் - அமைதல். பருத்திநூலாலும் பட்டுநூலாலும் நெசவாளரால் கைத்தறியில் சித்திரவேலைப்பாடமைய நெய்யப்பட்டவுருக்கள், திருந்திய புலவர்களால் சிறந்த சொற்பொருளமைதியுடனியற்றப்பட்ட பாக்கள்போல விளங்கும் என்றபடி.

290 தூரிகை - எழுதுகோல். விம்பம் - உருவம். காழியர் - சித்திரகாரர். சித்திரகாரரால் பலவகைச் சாயமூட்டியமைக்கப்பட்ட பல தருக்களும் கற்பகம்போல் விளங்கும் என்றவாறு.

291 குலாய - நிலைபெற்ற. அளகம் - கூந்தல். உபயம் - இரண்டு. குழை - குண்டலம். மிடறு - கழுத்து. இணை - இரண்டு. பயோதரம்-தனம். சுலவும் - சூழ்ந்த. தானை - வஸ்திரம். கமுகடவி - கமுகம்பொழில். கமுகடவி நிலமகள்குழாமெனவும் அழகுகூர்வ என்க.

292 பரசுபாணியன் - சிவபெருமான். கேசவன் - திருமால். மும்மை நூல் - இம்மை மறுமை வீடென்னும் இவற்றின் திறங்கூறும் நூல்; அன்றி, சித்து அசித்து ஈச்சுரம் என்னும் மூன்றும் பற்றியெழுந்த நூல் (திருவாய்மொழி முதலிய திவ்யப்ரபந்தங்கள்) எனினும் ஆம். உசிதம் - தகுதி. அகநகர் - மதிலின் உட்புறத்துநகர்.

293 மாயோன்றன் உலகம் - பரந்தாமம். கூறிட்டு - பங்கிட்டு. திருவுளத்தால் - மாநஸிகமான படைப்பினல், அதாவது சங்கல்பரூபமான படைப்பினல்.

294 மருந்து-அமுதம். இத்திருநகர் என்றது குருகைநகரினை. இதற்கு இணை காண்குவல் - இதற்கு ஒப்பான ஒரு நகரத்தைப் படைப்பேன். தியானம் - நினைவு. விருந்து - புதுமை. துணையலவாய் - ஒவ்வாதனவாய்.

295 முகுளம் - அரும்பு.

297 சரதம் - உண்மை. பிரமன்வைப்பு - சத்யலோகம். மரீஇய - மருவிய. இது - குருகாபுரி. வீடளித்தலாற் குருகைநகர் பிரமலோக முதலியவற்றினும் சிறந்ததென்றவாறு.

298 இல்லவள் - மனையாள். உலவா நலன் - கெடாத நன்மை. கழகம் - புலவர்கூட்டம். ஊதியம் - இலாபம். படிவம் - வடிவம்.

299 தானம் - 1. தேவருலகம். 2. நன்னிலையுடையது. விபுதர் - தேவர். கூண்டு - கூடி. புவனம் - உலகம். குருகை தன்னையடைந்தார்க்கும் தன் பெயர் மொழிந்தார்க்கும் ஞானமும் செல்வமும் நயந்தளித்தலால் தேவருலகத்தினும் சிறந்ததாயிற்று என்றவாறு.

300 கரும்பொன் - இரும்பு. மதிள் - மதில்.

301 ஆழியான்சிலை, குனிசிலை, ஆழியான்கதை என இயைக்க. ஆழியான்-திருமால். குனி சிலை - வளைந்த வில்; சார்ங்கம். கதை - கௌமோதகி. கோழியான் - கோழிக்கொடியையுடைய முருகன். அயில் - வேல். குன்றினைக் குறைத்துளான் - மலைகளைச் சிறகரிந்தவனான இந்திரன். குலிசம் - வச்சிராயுதம். சூழி - முகபடாம். கடாஅய் - செலுத்தி. துன்னலர் - பகைவர். துடைத்தல் - எளிதே போக்கல். ஊழியான் - பிரளயகாலத்தும் அழியாத கடவுளாகிய திருமால். சூத்திரப்பொறி - சூக்ஷ்மமான எந்திரங்கள். குருகைநகர் பகைவரை யொழித்தற்குதவும் சக்கரம் கதை மழு சூலம் வேல் வச்சிரம் முதலிய நுட்பமான பொறிகளையுடையது என்றபடி. இதனுள்ளும் அடுத்தபாட்டினுள்ளும் கூறப்படும் பொறிவகைகளைப்பற்றிய செய்திகள் சிலப்பதிகார முதலிய நூல்களிற் காணத்தகும்.

302 உலம் - திரண்ட கல். உலஞ்செறித்துள கலம் - கல்விடுகூடை. உடக்குநர் - பிரயோகிப்போர். சலம் - தணியாத சினம். பிணி - கட்டுகின்ற. உலஞ்செறித்துளகலங்கொள் பொறி, சங்கிலிக்கலங்கொள் பொறி, அழற்பிழம்பியக்குங்கலங்கொள் பொறி, கப்பணக்கலங்கொள் பொறி யென இயைக்க. கப்பணம் - இரும்பால் ஆனெருஞ்சின்முள்வடிவாகப் பண்ணப்பட்டது.

303 அகழியாகிய வீரமகள் தன்னிடத்தே செறிக்கப்பட்ட கழுக்களிடத்தே விரோதிகளை வீழ்த்தநினைந்து அவர் வரும்வழியை நோக்குதல் போல அகழியினிடத்துக் குவளைகள் மலர்ந்துவிளங்கும் என்றவாறு.

307 சுவணம் - பொன். புரிசை - மதில்.

308 உரவுநீர் - மிக்கநீர், அகழி. புழை - துவாரம். கணை - திரட்சி. குருமணியினொடு கஞ்சப்போதுகும் மணி குன்றும் என முடிக்க.

309 வாலுகவைப்பு - மணற்பரப்பான நிலம். நோக்கம் - அழகு. மணி - இங்கு முத்து. சங்கம் மணி சொரிவ(ன) என்க.

310 வாளையும் வராலும் மீனினங்கள். உகண்டு - குதித்து. பானு - சூரியன். வேண்ட - கிழிந்த. இறால் - தேன்கூடு.

311 இணர் - பூங்கொத்து. மான்மதம் - கஸ்தூரி. பொய்கைமலரின் மணமும் பொழின்மலரின்மணமும் இளையர்மார்பிலணிந்த கஸ்தூரிமணத்துடன்கலந்து, பிரித்தறிவரியவாயின என்றவாறு.

312 மதின்மேற்கொடிகள் குருகைநகருள் நுழையாதே என்று எமனைத் தடுப்பனபோன்றும், நல்லோர்களைத் தன்பாற்சேர வம்மினென்று அழைப்பனபோன்றும் அசைந்துதோன்றும் என்றவாறு.

313 இஞ்சி - மதில். மதின்மேல் வெண்கொடி துலங்குதல் குருகை யின்புகழ் கொழுந்துவிட்டெழுந்ததுபோல விளங்கும் என்றவாறு. புகழ்க்கு வெண்மைநிறங்கூறுதல் கவிமரபு.

314 வானவர்பொன்னகர் - அமராவதி. உத்தரகுரு - போகபூமிக ளுள் ஒன்று. ஏகம் ஆம் சொரூப மாநகர் - ஒன்றுன பரம்பொருளின் சிறந்த நகரமாகிய வைகுந்தம். தோன்றும் என்னும் பயனிலேக்கியையக் குருகை யென்னும் எழுவாய் வருவித்துரைக்க.

315 திக்கயம் எட்டு - ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீகம் என்பன. கம்பமால்வரை யெட்டும் என இயைக்க. மலேயெட்டு - இமயம், மந்தரம், கயிலே, விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம், கெந்தமாதனம் என்பவை. குருகைநகர் மாளிகை கள் மஹாமேருவும் அட்டகுலாசலங்களும்போல் விளங்கும் என்றபடி.

319 சூளிகை - உப்பரிகை. தளவம் - முல்லே. பனிக்கதிர் - குளிர்ந்த (சந்திர)கிரணம். மாளிகையின் உப்பரிகையில் படர்ந்த முல்லேயின் அரும்பு வரிசையைச் சந்திரகிரணங்கள் என்று சகோரங்கள் உட்கொண்டு அன்மை யின் நாணிக் கக்குவவாயின என்றவாறு.

320 வெள்ளிய மாடங்களின்மேல் மாங்கனிரசம் வழிந்தொழுகல் வெள்ளிமலேயில் செம்பொன் அசும்புபாய்வதுபோலும் என்றவாறு.

321 நவசந்து ஆர்பொழில் - புதிய அழகினேயுடைய சோலே. துவச வான் கழை - கொடிகட்டிய நீண்ட மூங்கில். இம்பர்வாய் - இவ்விடத்து. திவசமும் - நாள்தோறும். கற்பகக்கொடிகள் மாடங்களின் உச்சியில் நிறுத்திய கொடிகட்டிய மூங்கிலேப்பற்றி மேன்மாளிகையிற் படர்தலால் மாடங்கள் கவசமணிந்தனபோல அழகுடையனவாய் விளங்கும் என்பதாம்.

322 சேடு - உயர்ச்சி. மாடங்களின் உச்சியில் வளர்ந்த பூங்கொடிகள் சூரியனுடைய தேர்ச்சக்கரத்தைச் சுற்றிப் படர்ந்து அதன்செலவைத் தடுத் தன என்பதாம்.

323 கொண்டல் - மேகம். கீண்டு - கிழித்து. மாடத்துச்சியில் எடுக் கப்பட்டனவும் மேகத்தைக் கிழித்து அதன் நீரில் தோன்றுவனவுமான வெண்டுகிற்கொடிகள் கங்கைநதியில் வசிக்கும் கெண்டைமீன்களேயொக்கும் என்றபடி.

324 குழுமு - கூடுகின்ற. பொற்பதி - அமராவதி. மயன் - தேவர் தச்சன். மண்ணுலகோர் பொன்னுலகையடைதற்கிட்ட எழுநிலேப்படிபோல மாடங்கள் விளங்கும் என்றவாறு. இதுவரை குருகைநகரின் மாளிகைச் சிறப்புக் கூறப்பட்டது.

325 மேன்மாடத்து வேல்போலுங் கண்ணையுடைய மகளிர் பல பக்க் வாத்தியங்களும் முழங்க நடித்தலைக்கண்ட மயில், பொழில் அரங்காகவும் குயிலினம் முழவாகவுங்கொண்டு கூத்தரைப்போல ஆடும் குருகைநகர்வீதி களின் சிறப்பை இனிக் கூறுவோம் என்றபடி.

326 மாளிகைகள், தம் கணவர்திறத்துச்செலுத்தும் கற்புடைப்பெண் டிர்மனம்போற் குற்றமற்றசெவ்வியான்மேம்பட்டு, நாற்பொருட் பயன் றரும் பாரகாவியத்திற் சொல்லும் பொருளும்போல ஒன்றோடொன்று தொடர்புடையனவாய் விளங்கும் என்றபடி.

327 குருகைநகர்த்தெருக்கள், கண்டார்விரும்பும் தெளிந்த அமுதம் போன்ற மகளிருடைய தனத்திலும் நடையிலும் ஈடுபட்ட ஆடவர்மனங் களும், தலைவர்மாலைபெறும்பொருட்டுத் தலைவியரால் தூதனுப்பப்படும் அனங்களும் சுழலுதலைப்பொருந்திவிளங்கும் என்றபடி. இதனால் அங்கு வேறு மறுக்கம் இல்லையென்றவாறு.

331 வீரர்தூண்டும் குதிரைகளின்குளம்பினாலெழுதும் தூளி, அப்பரி களின்மீதுள்ள வீரர் மார்பிலணிந்த கஸ்தூரியாகிய வாசனைத்தூளியோடு கலந்து ஆகாயத்திற் பரவுதலால் சூரியனும் மறையுமென்றவாறு.

332 மான்மதம்-1. திருமால் பரம்பொருள் என்னும் மதம். 2, 3, யானை யின்மதம். 4, 5. கஸ்தூரி.

333 வாசி - குதிரை. மண்டிலம் - வட்டம். பூசல் - போர். வேழப் பொருப்பு - யானையாகிய மலை. விலாழி - யானைத்துதிக்கையினின்று பெரு கும் நீர். குதிரைவாய்நீருமாம்.

334 அவர் மெய்திரிசேறு அவை மெய்திரிசேறு என இயைக்க. ஆங்கு - அசை. மகளிர்கூந்தலிற்புனைந்த அரும்புகளவிழ்ந்து தேனைத்துளித்தலால் அம்மகளிர்மெய்திரிந்தசேறும், அத்தேன் தன்நிறந்திரிந்தசேறும், மண்மெய் திரிந்தசேறுமேயன்றி அங்கு வேறு சேறில்லை யென்றபடி.

335 கூற்றம் - யமன். நூபுரம் - சிலம்பு. மகளிர் சிலம்பொலியினுள் குழலும் யாழும் ஆகிய இவற்றால் தோற்றுவிக்கும் எழிசையும் அடங்கியுள் ளன என்றவாறு.

336 விகாரம் - வேறுபாடு. இன்றிய - இல்லாத. பனவர் - பார்ப் பார். பாராயணம் என்பது பராயணம் எனக் குறுகிநின்றது. ஓதை - ஒலி.

337 மழவர் - இளையார். சிவிறி - நீர்வீசுங் கருத்தி. மழவர் சிவிறிகள் பிடித்து மங்கையர்குழாத்து எய்த என இயைக்க. முலைச்சுவடு - இணை முலை. மறுகும் - அசைகின்ற. தாளவடம் - முத்துமாலை. மனமறுகல்-

மனக்குழம்புதல். திருவிழா நிகழும் தெருவில் இளமங்கையருடன் சிவிறி நீர்தூய் நீர்ப்பூசல் செய்யவிரும்பிய இளையார், அம்மங்கைமார்தனத்தே தங்கள் கண்ணெடு மனமும் பதிய நீர்ப்பூசலை மறந்தனராய், அம்மங்கைமாருடைய தாக்குகின்ற நீண்ட புருவமாகிய வில்லிலே பூட்டிய கரிய கண்களாகிய அம்புகள் தாக்கற்கு இலக்காய்நின்றனர் என்றவாறு.

338 ஆடகத்தசும்பு - பொற்குடம். அரிசனம் - மஞ்சள்விரவிய கலவைப்பொடி. அண்டை - நீர்தூவும் கருவி. சூடகம் - கைவளை.

339 பரிசனம் - சுற்றம். தெரிசனம் - கண். கண் கரி சனத்தினர் என்க. தாம் அசை. இமசலம் - பனிநீர். கவிழ்த்து - சொரிந்து.

340 காஞ்சனி - மஞ்சள். உபயம் - இரண்டு. தோட்புடைக்கொள் அறுவை - தோளிடத்தணிந்த மேலாடை.

341 தாமம் - மாலை. கச்சின்கடைப்புணர் - ரவிக்கையின்முடி. கடாக்களிறு - மத்தகஜம்; என்றது தனத்தினை. சென்னி - சிரம். படாம் - வஸ்திரம். ஓர்சோமன் - ஒற்றையாடை. சுண்ணம் - வாசனைப்பொடி.

342 அலங்கு - ஒளிசெய்கின்ற. பூண் - ஆபரணம். பங்கி - ஆண்மயிர். வலந்த - கட்டிய. காழ் - மாலை. நுதி - நுனி. நான்றதை - தொங்கியதை. மன்னவன் அண்மைவிளி; அன்றி, 'மன்னவ! நீ' என்றிருப்பினும் அமையும். நீ புலந்துளார் - உன்னுல் வெறுக்கப்பட்ட பகைவர். குடர் - குடல்.

343 இக்கவிமுதல் பரத்தையர்வீதி வருணிக்கப்படுகிறது. தழைதரா - தழைத்து. வீடுநாள் - அழியுங்காலத்து. வீடும் - (பற்று)விடும்; விடும் என்பது முதனீண்டு வீடென்றுனது விகாரம். ஆடன்மங்கையர் - பரத்தையர். ஈட்டம் - கூட்டம்.

344 வீடு - வீட்டின்பம்.

345 கூற்று - யமன். அசுணம் - இசைவிரும்பும் ஒருபுள்.

346 விதி - முறை.

348 புரந்தரன் - இந்திரன். மாரி - மழை. செரு - போர்.

349 முக்கனி தேனெடு பாலளாய் அடிசிலருந்தலும், ஆயிழையாரொடு உடம்பும் உயிரும் தளிர்க்கும்படி பொருந்தலும் ஆகியவற்றை இகழ்ந்து: என்க. புத்தேளிர் - தேவர். துற்று - அனுபவிக்கின்ற.

353 வளமை - மாட்சிமை. மதன் - மன்மதன். கோட்டம் - கோயில்,

354 பனிற்றும் - சிந்துகின்ற. பொதுவியர் - இடைச்சியர். கலை - வஸ்திரம். இடக்கர் - நாணம். அடைக்கலை - தழையுடை. அவதாம் - அவசரம் - நிலை. பொறித்தல் - எழுதுதல்.

355 திருமகன் - காமன். போழ - பிளக்க. இளங்கதிர் - பாலசூரியன். நாட்டம் - கண்.

356 கொய்யுளை - கத்தரிக்கப்பட்ட பிடரிமயிரையுடைய பரி. பொதுள் - அடர்ந்த. சிறகர் - இறகு. தவிசு - ஆசனம். வீவு இல் - கெடுதலில்லாத.

357 காளம் - எக்காளம். கோகிலம் - குயில். குயில் மதனனுக்குக் காளமென்பது கவிமரபு. எயிறு - பல். பேழ்வாய் . பிளந்த வாய்; பெரிய வாயும் ஆம். அரா - பாம்பு. கலவி - புணர்ச்சி(யைத்தீட்டிய சித்திரம்).

358 கரும்பு சுரும்பு என்பன கருப்பு சுருப்பு என்றுனது (வலித்தல்) விகாரம். குளம் - வெல்லம். போனகம் - உணவு. குளம் பெய் போனகம் - சர்க்கரைப் பொங்கல். மிசைதி - உண்ணுக. விரை - நறுமணம். தூய் - தூவி - அருச்சித்து.

359 கண் எறிந்து - கண்ணை வீசி - நோக்கி. படாம் - வஸ்திரம். பவழம் - பவளம். முறுவலித்து - சிறித்து. ஓதி - கூந்தல். ஏதிலார் - அயலார்.

360 கறங்கும் நூபுரத்தூதினில் திரும்புவித்து - ஒலிக்கின்ற சிலம்புகளாகிய தூதினுல் எதிர்முகமாக்கி. இறந்தநாளை நட்பு - சென்றகாலத்துத் தொடர்பு.

361 கொண்கர் - நாயகர். நேர்படா - நேர்பட. ஆடைசோர - உடை நழுவ.

362 கழிகவின் - மிக்க அழகு. காந்தர் - தலைவர். ஊமர் - ஊமையர். இறைஞ்சுபு - இறைஞ்சி - வணங்கி. வழுத்தி - துதித்து. அவரொடும் - அப்பொன்படைத்தவரோடு. கலந்து - கூடி. அவை - அப்பொன்னை.

363 இருநிதிக்கிழவன் மைந்தன் - மிக்க நிதிக்கு உரிமையுடையோன் மகன். அயல் - பக்கம். வாம பாணி - இடக்கை.

364 கறங்கு - ஒலிக்கின்ற. மாழை மாளிகை - பொன்மாடம். பாகு - பாக்கு. வெள்ளிலை - வெற்றிலை. பளிதம் - கருப்பூரம். அருத்தியபின் - உண்பித்தபிறகு. வட்டு - சூதாடுகருவி. மாயம் - வஞ்சனை. கவறு - சூதாடுகருவி.

உ

# திருமுருகாற்றுப்படை

# நூற்பொருளகராதி

**அந்தணர்:—**

ஆறுதொழிலையும் பொருந்திய முறையிற்றப்பாதவர்; தாய் தந்தையர் கோத்திரங்கள் பலவாய மதித்த பழைய குடியின்கட் பிறந்தவர்; நாற்பத்தெட்டியாண்டு பிரமசரிய நிலையில் நின்றவர்; முத்தீச்செல்வமுடையவர்; இருபிறப்பாளர் வேதங்களை ஓதுவதற்குப் பூணநூலையுடையவராய், ஆறெழுத்தறிந்து மலர்தூவி ஓதி முருகனை வணங்குவர். 177-188

**அருவி:—**

கொடிகள்போலசைந்து, அகில் மரத்தையும் சந்தனமரத்தையும் தள்ளி, மூங்கில்வேரைப் பிளந்து, தேனிறால் சிதையப் பலாச்சுளைகள் விரவச் சுரபுன்னைமலர்கள் உதிரக் குரங்குகள் நடுங்கப் பிடிகள் குளிர, மோதி, யானைக்கொம்புகளைக் கொண்டு, பொன்னும் மணியும் கொழித்து, வாழையையும் தெங்கையும் எற்றி, மிளகுகொடிகள் சாய, மயில்வெருவக் காட்டுக்கோழிகள் இரியக் காட்டுப்பன்றியும் கரடியும் முழையிலே சேர, ஆமாவின் ஏறு முழங்க, மலைகளில் அருவி இழுமென இறங்குதல். 296-316

**இந்திரன்:—**

ஆயிரங்கண்ணையுடையவன்; நூறுகிய பல வேள்விகளை முடித்துப் பகைவரை வென்ற வெற்றியினையுடையவன்; நாலு கொம்பையும் அழகிய நடையையும் தாழ்ந்து பெரிதான துதிக்கையையும் உடைய யானையின் புறக்கழுத்திலே ஏறியிருப்பவன். 155—159

**உருத்திரன்:—**

வெள்ளையெருத்தை வெற்றிக் களத்தில் உயரக்கொண்டிருக்கிறவன்; திண்ணிய தோள்களையுடையவன்; உமாதேவியைப் பாகத்துக் கொண்டவன்; இமையாத மூன்று கண்ணையுடையவன்; திரிபுரமெரித்தவன். 151—154

**கந்திருவர்:—**

மெல்லிய அழுக்கில்லாத ஆடையையுடையவர்; மாலைசூழ்ந்த மார்பினர்; யாழோசையிற் பயின்ற ஈரநெஞ்சமுடையவர்; மெல்லிய வார்த்தையை உடையர். அவர் இனிய யாழ் நரம்பைக் காந்திருவமகளிரோடு வாசித்தல். 138—142

**காந்திருவமகளிர்:—**

நோயில்லாத உடம்பினர்; மாவின் தளிர்போன்றநிறமுடையவர்; பொற்சுணங்குடையர்; மேகலையணிந்த குற்றமில்லாத மகளிர். அவர் கந்திருவரோடு விளங்குதல். 143-147

குறமகளிர்:—

சுனையிற் பூத்த பூக்களாலாகிய நெற்றிமாலையினையுடையர்; கூந்தலை யுடையர்; கஞ்சங்குல்லை, இலை, நறிய பூக்கள், கடம்பின் வெள்ளிய பூங் கொத்துக்கள்: இவைகளாலாய தழை யை உடுத்தவர்; மயில்போன்ற சாயலவர்; மடமையுடையர். அவர் குறவரோடு கைகோத்து, ஒலிக்கும் தொண்டகப்பறைக்கு ஏற்பக் குரவை யாடுதல். 194—205

கூடல்:—

மதுரையின்வாயில் நீண்டகொடி யினையுடையது; பந்தும் பாவையும் தூங்கப்பெற்றது; பகைவரை யழித் துப் போர்த்தொழில் இல்லையான மதில்வாயிலை உடையது. அந்நகர் திருவிளங்கும் அங்காடித்தெருவை யும் மாடங்கள் நெருங்கின தெருக் களையும் உடையது. தன் மேற்றிசை யிடத்துத் திருப்பரங்குன்றையுடை யது. 67—71

கூளியர்:—

வேறுபட்ட பலவடிவினையும்சிறிய பல்லையும் உடையராய்ப் பிள்ளையா ரைச் சேவித்துநிற்போர். 281-282

கேருடன்:—

பாம்பைப் படும்படி அடிக்கும் பலவரியையுடைய வளைந்த சிறகை யுடையது; திருமால் கொடியில் அணியப்பெற்றது. 148—151

சாம்புநதம்:—

இப்பெயரைப்பெற்ற பொன்னாற் செய்தபூணினைச் சூரரமகளிர் அணி தல். 18

சூரரமகளிர்:—

சதங்கை சூழ்ந்த அடியினையுடை யர்; திரண்டகாலையும் வளைந்த இடை யினையும் மூங்கில்போன்ற தோளினை யும் உடையர்; சிவந்த துகிலினை யுடையர்; காஞ்சியணிந்த அல்குலினை யுடையர்; இயல்பாகவே அழகை யுடையர்; பொற்பூணையுடையர்; தலைக்கோலங்களையுடைய தலையில் பூக்களையுடையர்; மருதம்பூ, சண்பகப்பூ இவற்றாலாய மாலையைக் கொண்டையைச் சூழக் கட்டியிருந்த னர்; காதில் அசோகந்தளிரையும் மார்பில் சந்தனக்குழம்பையும் உடை யர்; வேங்கைப்பூவின் தாதை அச் சந்தனக்குழம்பின்மேல் அப்பியிருந் தனர். அவர் விளாவினதுதளிரைக் கிள்ளி ஒருவர்மேல் ஒருவர் எறிந்து கோழிக்கொடியை வாழ்த்தி மலை ஆர வாரிக்கும்படி சோலையில் விளையாடு தல். 12—41

சூரன்:—

மக்கள்வடிவும் விலங்குவடிவுமான இரண்டுவடிவையுடைய உடலையுடை யவன். அவன் வேறுவேறாக அறும் படியும் அஞ்சும்படியும் முருகன் அவுணரை மண்டுதல். கீழ்நோக்கின பூங்கொத்தையுடைய மாவடிவாகிய அச்சூரபன்மாவென்னும் முதல்வனை முருகன் வேலாற் கொல்லுதல். 57—60

ஞாயிறு:—

உலகத்திலுள்ள பல்லுயிர்களும் மகிழ, மேருவை வலமாக, யாவர்க் கும் நேராகச் சுழலும்; தனது ஒளி யாற் காட்சியின்பயன்கொள்வார் பலராலும் புகழப்படும். கடலிடத்து ஞாயிறு, மயிலிடத்து முருகன் காணப்படுவதற்கு உவமை. 1—3

திருச்சீரலைவாய்:—

உயர்ந்தோராலே புகழப்பட்ட மிகவும் உயர்ந்த சீரிய புகழையுடையது. அத்திருச்செந்திலில் முருகன் ஆகாசவழியாகவந்து எழுந்தருளுதலும் உரியன். 119—125

திருப்பரங்குன்றம்:—

இரவில் வயல்களிலுள்ள தாமரைப்பூவிலே துயின்று காலையில் நெய்தற்பூவின் மதுவுண்டு ஞாயிறு தோன்றுங்காலத்துச் சுனைப்பூக்களிலே ஆரவாரிக்கும் அழகிய சிறகையுடைய வண்டுகளையுடைய சுனையினையுடைய திருப்பரங்குன்று. அங்கு முருகன் திருவுள்ளம்பொருந்தித் தங்குதலுமுரியன். 72—77

திருமால்:—

கெருடனையணிந்த நீண்ட கொடியினையுடையவன். 151

திருவாவினன்குடி:—

தேவரும் மூவரும் வந்து தன்னைக் குறையிரக்கும்படி முருகன் இங்குத் தெய்வயானையாருடன் தங்குதலுமுரியன். 174—176

திருவேரகம்:—

அந்தணர் தன்னை வழிபட அதற்கு மகிழ்ந்து முருகன் இத்திருப்பதியிலிருத்தலும் உரியன். 188—189

தெய்வயானையார்:—

குற்றமில்லாத அறக்கற்பையுடைய இந்திரன்மகள்; முருகன் மனைவி. 6

தேனிறல்:—

நெடியமலையிடத்து ஆதித்தமண்டலம்போலத் தொடுத்துக் காணப்படுதல். அது மலையருவியின் வேகத்தால் சிதைதல். 299—300

நான்முகன்:—

திருமால் உந்தித்தாமரையிலே உண்டாக்கப்பட்ட இடையீடில்லாத ஊழிக்காலத்தையுடையன்; நாலு முகத்தையுடையவன். அவன் பிள்ளையார் சாபத்தினாலே பூமியில்வந்து பிறத்தல். நான்முகனைப் படைக்குந் தொழிலில் நிறுத்தவேண்டிச் சிவனும் மாலும் இந்திரனும் திருவாவினன்குடியில் வந்து முருகனைக் காணுதல். 160—165

பதினெண்கணங்கள்:—

மீன்பொலிவதுபோன்று நெருங்கித்தோன்றுவர்; உயர்ந்த பதங்களைப் பெற்றிருப்போர்; வாயுவேக நடையினர்; காற்றில் நெருப்புப்போன்ற போர்வலியை வல்லர்; இடிபோன்ற குரலினர்; பிள்ளையார் இருமருங்கிலும் நின்று தம் குறையை முடிப்பர். அவர் ஆகாயத்தே சுழற்சியையுடையராய் வந்து திருவாவினன்குடியிற் கூடுதல். 168—174

பேய்மகள்:—

காய்ந்த மயிரினையும், நிரையொவ்வாத பல்லையும் பெரிய வாயையும், சுழன்ற விழியையும், காதில் கூகையையும் பாம்பையும் உடையள். போர்க்களத்தில் கையில் தலையை ஏந்தி நிணந்தின்று வென்றியைப் பாடித் துணங்கையாடுதல். 47—56

மராஅமரம்:—

இருளுண்டாம்படி தழைநெருங்கின பருத்த அரையையுடைய செங்கடம்பு, மழைபொழிந்து குளிர்ந்த மணமுடைய காட்டிடத்து உண்டாதல். அதனது வட்டம் பொருந்திய பூவாற்செய்த குளிர்ந்த மாலையை முருகன் அணிதல். 7—11

முப்பத்துமுவர்:—

அறிவின்மயக்கத்தால் வேறுபடத் தோன்றுவதில்லாத அறிவினையுடைய ஆதித்தர், வசு, மருத்துவர், உருத்திரர் என்போர். 166—167

முருகன்:—

கடலிடத்துக்காணப்படும் ஞாயிறு போலப் போதுசெய்யாமல், எக்காலமும் ஒழிவற விளங்குவதாகி மனவாக்கையும் கடந்த தூரத்திலே விட்டுவிளங்காநின்ற ஒளியினையுடையன்; தன்னை யடைந்தோரைத் தாங்கி யான் எனது என்னும் செருக்கைக்கெடுக்கும் வலிய தாளினையுடையன்; மாறுபட்டோரை அழித்த இடியேறுபோன்ற கையினையுடையன்; 3—5.

ஆதித்தனையுங் காணாத மரம் நெருங்கின சூரரமகளிராடுஞ் சோலையிடத்து வண்டுகள் மொய்யாத நெருப்பையொத்த காந்தட்பூவினது மாலையை முடியிற் சூடியவன்; 41-44

குற்றமில்லாத வெற்றியையும் ஒருவராலும் அளந்தறியப்படாத நல்ல புகழையும் சிவந்த வேலினையும் முதிராவடிவையும் உடையன். அவன் திருவடிகளையடையும் உள்ளமொடு நன்றான அறங்களைச்செய்து அவன் தங்குமிடத்திற்குச் சென்றால் அவன் அருள்பெறலாம். 60—66

திருப்பரங்குன்றிலே திருவுள்ளம் பொருந்தியிருத்தலுமுரியன். 77

தேவர்களும் மூவர்களும் வந்து தன்னைக் கண்டு குறையிரக்கும்படி கற்புடைய தெய்வயானையாருடனே சித்தன்வாழ்வென்னும் ஆவினன் குடிப்பதியில் தங்குதலும் உரியன். 174—176

அந்தணர் பூக்களை ஏந்தி, ஆறெழுத்தோதித் தன்னை வழிபட மிக மகிழ்ந்து ஏரகம் என்னும் திருப்பதியிலே இருத்தலும் உரியன். 188-189

சிவந்த மேனியன்; சிவந்த உடையன்; சிவந்த அரையினன்; காதில் அசோகின் தளிர் அசையப்பெற்றவன்; கச்சினன்; கழலினன்; வெட்சி மாலையையுடையன்; குழலும் கொம்பும் தோற்கருவிகளும் உடையன்; கிடாயும் மயிலுமுடையன்; கோழிக் கொடியோன்; நெடியன்; வளையணிந்த தோளையுடையவன். 206—211

நுண்ணிய எழுத்துத் தொழில் பொருந்திய துகிலையுடையன்; வேலேந்தினவன்; இனிய குரலினையுடைய கந்திருவமகளிர் கூட்டத்தோடு மெய்தீண்டி விளையாடும் தெய்வமகளிரைத் தழுவிக்கொண்டு இருப்பிடங்கொடுத்து மலைதோறும் சென்று விளையாடுதலும் உரியன். 212—217

கல்லாலின்கீழிருந்த கடவுளுக்கும் இமையப் பருவதராசன்மகளாகிய பரமேசுவரிக்கும் துர்க்கைக்கும், காடுகிழாளுக்கும்மைந்தன். 256-259

வில்லையுடைய தேவர்சேனபதி, மாலைமார்பன், புலவன், போரில் ஒப்பற்றவன், வீரன், அந்தணர்செல்வம், அறிந்தோர்க்குச் சொன்மலை, தெய்வயானையார்க்கும் வள்ளிநாய்ச்சியார்க்கும் கணவன், வலியோர்க்கு இடபம், வெற்றிவேற் செல்வன், கிரவுஞ்சகிரியைப் பிளந்தோன், குறிஞ்சிக்குரியன், கவிப்புலவோர்க்குச் சிங்கம், வீட்டினை யுடையோன், விரும்பினோர்க்கு வீடளித்து விம்மினோர்க்கு அருள்செய்பவன். 260—272

இரந்துவந்தோரைப்பாதுகாத்துக் கண்டார்க்கு உருகுதல் தோன்றப் பட்ட பெரியவன்; பலரும் ஏத்தும் புகழாளன்; அசுரகுலத்தை அழித்தவன்; ஒப்பில்லா மெய்ஞ்ஞானமுடையவன். 273—280

இரவலன்வரவைக் கூளியர் கூற அறிந்துவந்து தன் மணநாறுகின்ற தெய்வத்தன்மையையுடைய இளைய அழகைப் புலப்படுத்தி அச்சம்நீக்கி அன்புகூர்ந்து அருண்மொழி யளைஇ வீட்டின்பத்தைத்தருவன்; வானைத் தீண்டும் உயர்ச்சியை யுடையன். 282—295

அருவியையுடைய நற்கனிகள் உதிரப்பட்ட சோலைகளையுடைய மலைக்கு உரிமையுடையோன். 316—317

முருகன் உறையும் இடங்கள்:—

விழவினும், வெறிக்களத்திலும், அன்பர் துதியின்கண்ணும், காட்டினும், காவினும், துருத்தியினும், யாற்றினும், குளத்தினும், பல சந்திகளிலும், கடம்பினடியிலும், மன்றத்தினும், பொதியினும், கந்தினும், குறமகள் முருகாற்றுப்படுக்கும் இடத்தினும் முருகன் உறைதல். 218-250

முருகன் ஆறுமுகங்கள்:—

உலகம் இருள்நீங்கி விளங்கும்படி சோம சூரியாக்கினியிடத்திற் பலவாகிய கிரணங்களை ஒருமுகம் விரித்தது; ஒருமுகம் அடியார்வேண்டுகோள்களைக் கொடுத்தது; ஒருமுகம் பிராமணருடைய யாகங்களைத் தீங்கு வாராமல் ஆராயாநிற்கும்; ஒருமுகம் ஆய்ந்தறியப்படாம லொழிந்த ஆழ்பொருள்களை இருடிகள் இன்புறும் வண்ணம் ஆராய்ந்து திங்களைப் போல அத்திக்குகளை விளக்கும்; ஒருமுகம் அசுரரையழித்துப் போர்க்களத்தை விரும்பாநின்றது; ஒருமுகம் வள்ளியுடன் மகிழ்ச்சிபொருந்திற்று. 91—102

முருகன்குழை:—

அவனது மகரக்குழைகள் திங்களைச் சூழ்ந்த மீன்கள்போல் ஒளிவிடுவன. 86—88

முருகன் பன்னிருகைகள்:—

ஒருகை தேவர்களுக்குப்பாதுகாவலாக உயர்ந்தது; மருங்கில்வைத்தது ஓர்கை; துடையின்மேலே ஒருகை தங்கியது; ஒருகை அங்குசத்தால் யானையைச் செலுத்தியது; இரண்டு கைகள் பரிசையுடன் வேலைவலமாகச் சுழற்றின; ஒருகை மார்போடு விளங்கிற்று; ஒருகை மாலையோடு சேர்ந்தது; ஒருகை மேலே படைக்கலம் எறிதலாற் சுழல மற்றொருகை வீரமணியை முழக்கும்; ஒருகை மழையைப் பெய்ய ஒருகை தெய்வயானையார்க்கு மணமாலை புனையும். 107—118

முருகன் பிறப்பு:—

இருடிகள் அக்கினியிலிட்ட கருப்பத்தை அருந்ததியொழிந்த ஆறு

மனைவியரும் கொண்டுசூன்முதிர்ந்து இமவானுச்சியில் சுனையிடத்தே பெறப்பட்ட ஆறுவடிவைப் பொருந்திய செல்வன். 253—255

முருகன்மார்பு:—

பதக்கம் தங்கப்பெற்றது; அழகும் பெருமையும் உடையது; மூன்று வரியாகிய இலக்கணத்தை உடையது. 104—105

முருகன்முடி:—

ஐந்து தொழிற்கூறுகளும் முற்றுப் பெற்றது; பல இரத்தினங்களை யுடையது. 83—85

முருகன்யானை:—

புகரையுடைய மத்தகத்தே மாலையும் பட்டமும் உடையது; மருங்கில் மணியுடையது; கூற்றம்போன்றது; வாயுவேகமுடையது. 78-82

முருகாற்றுப்படுத்தல்:—

கோழிக்கொடியுடனே அலங்கரித்து, நெய்யும் ஐயவியும் பலியிட்டு மந்திரங்களை உச்சரித்துச் செந்நூலாலே காப்புக்கட்டிப் பொரிகளைத் தூவிக் கிடாயினது உதிரங் கலந்த அரிசியைப் பலியாகக் கொடுத்து, மஞ்சளும் சந்தனமும் தெளித்து, மாலைதூக்கித் தூபங் கொடுத்துக் குறிஞ்சிபாடிக் குருதிச் செந்தினைபரப்பி, மணிகளை அசைத்து, மயிலைவாழ்த்திக் குறமகள் வெறியாடுதல். 227—249

முனிவர்:—

மாவுரியுடையினர்; நரைத்த முடியினர்; அழுக்கற்று விளங்கும் வடிவினர்; மானின்தோல் தைவரும் மார்பில் பட்டினியால் எலும்புதோன்றும் உடம்பினர்; மாதவுபவாசமுடையர்; மாறுபாடும் கோபமும் போக்கியவர்; கற்றோரால் அறியப்படாத அறிவினர்; கல்விக்குத் தாமே எல்லையாயிருக்கிற தலைமையையுடையர்; போகப்பொருளிச்சையுடனே கடியசினத்தையும் போக்கின அறிவினையுடையார்; துன்பம் சிறிதும் அறியாத இயல்பினர்; யாவரிடத்தும் வெறுப்பில்லாத அறிவினையுடையர்; திருவாவினன்குடி முருகன் கோவிலுக்குள் தேவர்களுக்குமுன் முனிவர்செல்லுதல். 127—137

வள்ளி:—

குறவர்மடமகள்; கொடியிடையாள்; பேதைமையையுடையாள்; முருகனது ஒருமுகம் அவளுடன் மகிழ்ச்சிபொருந்திற்று. 100-102

விழவு:—

சிறிய தினையரிசியைப் பூக்களோடு கலந்து இட்டு, ஆட்டை அறுத்துக் கோழிக்கொடி நிறுத்து, ஊர்தோறும் விழவுகொள்ளுதல். 218-220

வெறியயர்தல்:—

வேலன் வெறியாடுங்களத்தில் முருகன் உறைதல். 222

வேலன்:—

பச்சிலைக்கொடியாலே சாதிக்காயை நடுவே யிட்டுத் தக்கோலக் காயும் காட்டுமல்லிகையுடனே கலந்து வெண்டாளியையும் தொடுத்துக் கட்டின நெற்றிமாலையையுடையனாய், சந்தனம்பூசிய மார்போடு, கள்ளினது தெளிவையுண்டு, குறவர் குரவையாட வெறியாடுபவன். 190—197

## II. செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | ஐந்திணையைம்பது (உரையுடன்) ... ... | 0 | 4 | 0 |
| 2. | கனுநால் (5) இனியதுநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 3. | *வளையாபதிச்செய்யுட்கள் ... ... ... | | | |
| 4. | புலவராற்றுப்படை ... ... ... | 0 | 3 | 0 |
| 6. | *நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | | | |
| 7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | 0 | 6 | 0 |
| 8. | திணைமாலைநூற்றைம்பது (உரையுடன்) .. | 0 | 8 | 0 |
| 9. | அநுமானவிளக்கம். ... ... ... | 0 | 10 | 0 |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... ... | 0 | 2 | 0 |
| 11. | *விவசாயரசாயன சாஸ்திரச்சுருக்கம் ... ... | | | |
| 12. | *பன்னிருபாட்டியல் ... ... ... | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 4 | 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 3 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 | 8 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம்... ... ... | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... ... | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) ... ... | 0 | 8 | 0 |
| 22. | *திருக்கலம்பகம் (ஷை) ... ... | | | |
| 23. | *விக்கிரமசோழனுலா ... ... ... | | | |
| 24. | குருமொழிவினாவிடை ... ... ... | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமான் இரட்டைமணிமாலை... ... | 0 | 2 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை... ... ... | 0 | 8 | 0 |
| 28. | *சந்திராலோகம் ... ... ... | | | |
| 29. | *சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... ... | | | |
| 30. | ஞானாமிர்தக்கட்டளை ... ... ... | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் ... • ... ... ... | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள்விளக்கம் ... ... ... | 1 | 4 | 0 |
| 35. | *திருமந்திரநூறுபாட்டுக்குரை ... ... | | | |
| 36. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 39. | *பழமொழி மூலமும் பழையவுரையும் (முதல் 100 செய்) | | | |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 | 12 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடும் தமிழும் ... ... ... | 0 | 6 | 0 |
| 49. | *கடைவள்ளலார்காலம் ... ... ... | | | |
| 50. | தமிழரும் ஆந்திரரும் ... ... ... | 0 | 4 | 0 |
| 51. | மதங்கசூளாமணி ... ... ... | 1 | 0 | 0 |
| 52. | கூடற்புராணம் ... ... ... | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் (தமிழ்) ... ... ... | 0 | 6 | 0 |
| | ஷை (ஆங்கிலம்) ... ... ... | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்கநிகண்டு ... | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் ... | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் ... ... ... | 0 | 10 | 0 |
| 57. | மதுரைமும்மணிக்கோவை... ... ... | 0 | 5 | 0 |
| 58. | பழனிப் பிள்ளைத்தமிழ் ... ... ... | 0 | 3 | 0 |
| 59. | கடம்பர்கோயில் உலா ... ... ... | 0 | 6 | 0 |
| 60. | சங்கரநயினார்கோயில்அந்தாதி ... ... | 0 | 6 | 0 |
| 61. | கலைசைக்கோவை ... ... ... | 0 | 12 | 0 |
| 62. | பெருந்தொகை ... ... ... | 5 | 0 | 0 |
| 63. | சூடிக்கொடுத்தநாய்ச்சியார்தோத்திரப்பாமாலை ... | 0 | 5 | 0 |
| 64. | சிராமலைக்கோவை ... ... ... | 0 | 12 | 0 |
| 65. | மத்யமவியாயோகம் ... ... ... | 0 | 2 | 0 |
| 66. | சந்திரகுப்தன் ... ... ... | 0 | 6 | 0 |
| 67. | அமிர்தரஞ்ஜனி ... ... ... | 0 | 2 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:-1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டுவெளியாகிவரும் இச்"செந்தமிழ்"ப்பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச்சந்தா ரூ 4—8—0. இதுவரை 37 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டுசெய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—0—0-வீதமும், பைண்டுசெய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி—இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்குமேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

3. சங்கப்பதிப்புப்புத்தகங்களை, ஒரு ரூபாய்க்கும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு, ரூபா ஒன்றுக்கு அரை அணா வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.